# செந்தமிழ்ச் செல்வி



## பொன் விழா ஆண்டு

**தமிழ்மொழி, இனம், நாடு**
**இவற்றின் முன்னேற்றத்தைக்**
**குறிக்கோளாகக் கொண்டு**
**நடைபெற்றுவரும்**
**இத் திங்கள் வெளியீட்டின்**
**ஐம்பதாவது சிலம்பு**

பத்தாவது பரல்



(June'76)

---

## உள்ளுறை



---

# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| சிலம்பு | திருவள்ளுவர் ஆண்டு உ௦௦ எ, வைகாசி | பரல் |
|---|---|---|
| ௫௦ | சூன் 1976 | ௮௦ |


## மறைமலையடிகள் தமிழ்ப் பேரறிஞர் மட்டுமல்லர் பலதுறைப் பெரு நிறுவனமாக விளங்குபவர்

மறைத்திரு மறைமலையடிகள் 15-7-1876இல் நாகையில் காடம்பாடி சொக்கநாத பிள்ளைக்கும், சின்னம்மைக்கும் அவர்கள் செய்த நோன்பினால் பிறந்தனர். அடிகள் தமது 10ஆம் அகவையில் தம் தந்தையாரை இழந்து அன்னையாரால் வளர்க்கப் பெற்றார். தமது 18ஆம் அகவையில் சவுந்தரவல்லி என்னும் அம்மையாரை மணம் புரிந்தனர். திருமணமான அடுத்த ஆண்டு (1894) 'சிந்தாமணி' என்னும் பெண் மகவு பிறந்தது. பின்னர் 1898 முதல் சென்னைக் கிறித்துவக் கல்லூரியில் ஆசிரியராக அமர்ந்து 1911 வரை பணியாற்றினார். ஆசிரியராக இருந்த காலத்தில் 1903 முதல் 1911 வரை 'நீலாம்பிகை' என்ற பெண் மகவும் அடுத்து சமய குரவர் நால்வர் பெயர் கொண்ட நான்கு ஆண் மக்களும், 'திரிபுரசுந்தரி' (முந்நகரழகி) என்ற பெண் மகவும் பிறந்தனர்.

1911இல் கிறித்துவக் கல்லூரிப் பணியினின்றும் அடிகள் விலகியபின் நூல் ஆராய்வதற்கும், நூல் எழுதுவதற்கும், இடம் வாங்கி வீடு கட்டித் தனித்து வாழ்வதற்கு விரும்பினர். 1907இல் சிவராசயோகம், இராமானந்தசுவாமி அவர்களிடம் அடிகள் 'ஐந்தெழுத்து மறை' கேட்டனர். 27-8-1911இல் துறவு பூண்டு காவியாடை கட்டினர். சைவப் பணியும், தமிழப் பணியும் அன்றி வேறு அலுவல்களை ஏற்கக்கூடாது என்பதே துறவு பூண்டதன் நோக்கமாகும். பல்லாவரத்தில் வாழ்ந்து வரும் காலத்தில் தம் மூத்த மகள் சிந்தாமணியும், அவர் தம்

கணவர் அடுத்தும் காலமானமையால் அவர்கள் பெற்ற ஆண் மகவும், பெண் மகவும் அடிகள் வளர்ப்பதற்கு வந்து சேர்ந்தனர். இந்த வகையில் அடிகளுக்குக் குடும்பப் பொறுப்பு முன்னிலும் பெருகியது. அத்தனை மக்களையும், பேரன், பேத்தியையும், வளர்த்துப் படிக்க வைத்தும், வேலையில் அமர்த்தியும், திருமணம் செய்வித்தும் தம் கடன்களைப் புரிந்தமை இங்குக் குறிப்பிடத்தக்கது.

அடிகள் பல்லாவரத்தில் வாங்கிய இடத்தில் 50 அடி நீளமும் 40 அடி அகலமும் உள்ள கட்டிடம் ஒன்றை அமைக்கலானார்.

அவ்விடத்தின் கீழ்ப்புறம் தென்னிந்திய இருப்புவழியை ஒட்டியது. பெரிய ஏரி ஒன்று தென் கீழ்ப்புறம் உள்ளது. கிழக்கு மேற்காக உள்ள மனையின் நாற்புறமும் 7 அடி உயரமுள்ள மதில்கள் எழுப்பப்பெற்றுள்ளன. மதில்களுக்கும், மாளிகைக்கும் இடையில் நாற்புறமும் தோட்டம் அமைத்து, தென்னை, மா, பலா, மகிழ், வேம்பு, வாழை, போன்ற மரங்களும், நந்தியாவட்டை, மல்லி, ரோசா, புன்னை முதலிய பூஞ்செடிகளும் வளர்க்கப்பெற்றன. சில காலங்களில், காய்கறிகளும் கீரை வகைகளும் பயிர் செய்யப்படும். கட்டிடத்திற்கும் தோட்டத்திற்கும் மாளிகைக்கும் ஏற்றபடி மாளிகைக்கு வட கீழ்ப்பக்கம் பெரிய கிணறு ஒன்று தோண்டச் செய்து கிணற்றின் மேல் பாகம் சூழவும் வட்டச் சுவர் எழுப்பித்துப் பக்கத்தில் இறைக்கும் தண்ணீரை நிரப்புதற்கு இரண்டு சிறு தொட்டிகளும், 7 அடி உயரத்தில் தொட்டி ஒன்றும் கட்டுவித்தார்கள். உயரமான தொட்டியிலிருந்து கலாய்க் குழாய் வழி மாளிகையின் உட்புறமுள்ள சமையலறை குளிப்பறைகளுக்கும், முகப்பில் தோட்டத்திற்கு தண்ணீர் பாய்ச்சுவதற்கும் திருகுபிடிகள் (Taps) அமைத்தனர்.

மாளிகை உறுதியானவகையில் நல்ல பொருட்களைக் கொண்டு அடிகள் மேற்பார்வையில் கட்டப்பட்டுள்ளது. அதன்கண் அடிகளின் அலுவலகமும், நூல் நிலையமும், அச்சகமும் அமைக்கப் பெற்றன. நூல் எழுதுதல், துயிலுதல், இறை வழிபாடு செய்தல் ஆகியவற்றிற்குத் தனித்தனி இடங்கள் மாளிகையில் ஏற்படுத்தப் பெற்றன. இந்த முறையில் அடிகள் கட்டடக் கலைஞராகவும் தோட்டக்கலைஞராகவும் திகழ்ந்தனர்.

1916 இல் தம் நூல்கள் அச்சிடுவதற்கெனத் தமது மாளிகையில் 'திருமுருகன் அச்சகம்' திறப்பிக்கும் வரை தமது தமிழிதழ் ஞான சாகரத்தையும், ஆங்கில இதழ் ஓரியண்டல்

மிஸ்டிக் மைனுவையும் சென்னையிலுள்ள அச்சுக் கூடங்களில் அச்சிட்டு வந்தனர். அவற்றை அச்சிடுவதும் தாள் வாங்குவதும் மெய்ப்புக்களைத் திருத்திக் கொடுப்பதும், இதழ்களைக் கையொப்ப நண்பர்களுக்கு அஞ்சலில் அனுப்பிவைப்பதுமாகவுள்ள பணிகளை மிகவும் கருத்தோடு செய்து வந்தனர்.

தமது மாளிகையில் அச்சகம் அமைத்தபின் அதற்கு வேண்டிய தாள், மை முதலியவற்றைத் தாமே சென்னையினின்றும் வாங்கி வந்தும், அச்சுக் கோப்பவர், அச்சுப்பொறி இயக்குநர் முதலியவர்களை அமர்த்தியும், தம் இதழ்களையும், நூல்களையும் நன்முறையில் அச்சிடுவாராயினர். அவற்றிற்கெல்லாம் உரிய கணக்கினை முறையாக எழுதி வைப்பர். இதழ்கள் வரவழைப்பவர் முகவரிகளைத் தாமே தனிப் பதிவேட்டில் எழுதுவர். இதழ்கள் திங்கடோறும் குறித்த காலத்தில் அனுப்பப் பெறுவதில்லை. பதிவு செய்யப் பெற்ற இதழாக நடத்தாமையாலும், தம் நூல்களை அல்லாமல் வேறு செய்திகளை அதன்கண் வெளியிடுவதில்லாமையாலும் அதனைப் பதிவு செய்யவில்லை. இதழ்களின் புறவேடுகளில் கட்டுரைகளும், கையொப்ப நண்பர்கட்கு அறிவிப்புகளும் எழுதுவர். இவ் வகையில் நூல் அச்சிடுவதில் தமது திறமையினை நன்கு காட்டினர். பெரும்பான்மை எல்லாவற்றையும் தாமே கவனிப்பர். தம் மக்களையும் சிலவேலைகட்குப் பயன் படுத்துவர்.

அச்சகத்திற்கு வேண்டிய தாள், மை முதலிய பொருள்கள், வீட்டுக்கு வேண்டிய உணவுப் பொருள்களோடு, பிற வேண்டிய பொருள்கள் ஆகியவற்றைச் சென்னைக்குத் தாமே சென்று வாங்குவர். தம் மக்களை அனுப்பியும் வாங்குவதுண்டு. எல்லாச் செலவுகளையும் நாடோறும் முறையாகக் கணக்கெழுதி வைப்பர். பிறரைக் கொண்டு வாங்கப்பெறும் பொருள்களுக்குரிய விலை சரிதானு என்றும் அவற்றிற்குரிய எடையும் அளவும் சரிதானு என்றும் கவனிப்பர். அதன் பொருட்டுத் தராசும் படிகளும் அளவு கருவிகளும் வாங்கி வைத்திருந்தனர்.

மாளிகைக்கு மின் விளக்குகள் அமைக்கப் பெருமையால் மண்ணெண்ணெய் விளக்குகளையே அடிகள் பயன்படுத்தி வந்தனர். அவற்றைத் தாமே துடைத்துத் திரிபோட்டு எண்ணெய் ஊற்றித் துலக்கமாக வைப்பர். —வ. சு.

(தொடரும்)



# மறைத்திரு மறைமலையடிகளார் வரலாற்று மாட்சி

*மாணவர், திருக்குறள்பீடம் குருகுலம்*

அழகரடிகள் (இளவழகனர்)

## 10. எழுத்து நடை

'ஞான சாகரம்' என்னும் 'அறிவுக் கடல்' 1902 இல் தொடங்கப்பட்டது. அப்போது அடிகள் சென்னைக் கிறித்துவக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராய் விளங்கி வந்தார்கள். 'அறிவுக் கடல்' என்னும் இதழின் மூலமாகவே பெரும்பாலும் அடிகளார் நூல்கள் வெளிவந்தன. 1902 இல் அடிகளுக்கு வயது 25 முடிந்திருந்தது. பதினாறும் ஆண்டில் தமிழ் நூற் பயிற்சி தொடங்கப்பட்டது. தமது 21 ஆம் ஆண்டிலேயே தமிழ்ப்புலமை பெருகப் பெற்றிருந்தார். தமிழ் மொழியைப் பயின்று வரும்போதே நாகப்பட்டினத்திலும், பிற இடங்களிலும் நடைபெற்று வந்த இதழ்களில் அரிய கட்டுரைகள் பல எழுதி வந்தார். 20 ஆம் வயதிற்குள் 'முதற் குறள் வாத நிராகரணம்' என்னும் மறுப்பு நூல் எழுதினர். 'துகளறு போதம்' என்பதற்கும் உரை எழுதினர். அதன்பின், 'சித்தாந்த தீபிகை' என்னும் இதழுக்கு 5 திங்கள் வரை ஆசிரியராய் இருந்து கட்டுரைகள் பல வெளியிட்டார். 'சோமசுந்தரக் காஞ்சியாக்கம்' என்னும் செய்யுள் நூலும் பின்பு எழுதினர். இவையெல்லாம் அடிகளின் 25 ஆம் வயதுக்குள் எழுதப்பட்டவை.

ஞான சாகரத்தின் முதல் மலரில் 'உருவ வழிபாடு' 'தமிழ் வடமொழியினின்றும் பிறந்ததா' 'தமிழ்ச் சொல் உற்பத்தி' 'தொல்காப்பிய முழுமுதன்மை' 'உள்ளது போகாது இல்லது வாராது' 'க்ஷேத்ரபதிடத மொழி பெயர்ப்பு' 'மாணிக்கவாசகர் காலம்' 'இறையனர் அகப்பொருளுரை வரலாறு' 'பரிமேலழகர் உரை ஆராய்ச்சி', 'முனிமொழிப் பிரகாசிகை' முதலிய கருத்துக் களின்மேல் நூல்களும் கட்டுரைகளும் வெளிவந்தன. இவற்றி லிருந்து அடிகள், வாழ்க்கைக்குத் தேவையான பல துறைப் பொருள்கள் மேல் எதுவும் எழுதக் கூடியவர் என்னும் உண்மை விளங்குகிறது. அறிவுக் கடலின் கடைசி வரையில் இங்ஙனமே பல துறைப் பொருள்கள் தொடர்ந்து வந்தன.

கல்லூரியில் அலுவலில் இருக்கும்பொழுது விடுமுறைக் காலங்களில் அடிகளார் தமிழ்நாடு எங்கும் உலாவி அரிய பொருள்கள்மேல் சொற்பொழிவு ஆற்றியும் வந்தார். அவை

யெல்லாம் 'அறிவுக் கட'லில் பெரும்பாலும் நூல்களாகவே வெளிவந்துள்ளன.

எழுதும் முறை :

கட்டுரை எழுதினாலும், நூல் எழுதினாலும், ஒரு கருத்தின் மேல் விரிவுரை செய்தாலும், முன்னால் அதனை நன்கு ஆராய்ந்து தலைப்புகளும், உள் தலைப்புகளும் அடிகள் குறித்துக் கொள்வார். கருத்துக்களின் இப் பாகுபாடுகளுடன் தமிழ், ஆங்கிலம், வட மொழி நூல்களின் மேற்கோள்களும் குறிப்புக்களும் திட்டப் படுத்திக் கொள்வார். அதன் பின்பே எழுதவோ, பேசவோ முற்படுவார். இக் காரணத்தால், நூல் எழுதி முடியப் பல ஆண்டுகள் ஆனாலும் கருத்துத் தொடர்பும் எழுத்து நடைத் தொடர்பும் விடாமல் இருக்கும்; ஒத்துச் செல்லும்.

இனி, அக் கருத்தை மொழியில் இட்டு எழுதும்போது பெரும்பாலும் ஒவ்வொரு நூலுக்கும் ஒவ்வொரு வகையாக எழுத்து நடையை அடிகளே அமைத்துக் கொள்வார். இடை யிடையே வேறுவேறு எழுத்து நடையை எழுதி வந்தாலும் ஒவ்வொரு நூல் நடையும் நடைவேறுபாடு தவறாமல் தொடர்ந்துவரும்; அப்படி எழுதுகின்ற பழக்கம் மிக வியப்பாக வும் தனிச் சிறப்பாகவும் அடிகளுக்கு அமைந்துவிட்டது. ஒரு நூலின் ஒரு பகுதி எழுதி ஆண்டுக்கணக்கில் இடைவிட் டிருக்கும். இடையில் வேறுவேறு நூல்கள் வேறுவேறு நடையில் எழுதப்பட்டு அவைகளுள்ளும் இடைவிட்டிருப்பன உண்டு. எல்லா எழுத்துக்களையும் அந்த அந்த நடையிலும் கருத்திலும் அடிகள் தொடர்ந்து எழுதி வந்தார். இந்த ஆற்றல் பலர்க்கு அமையாதது. அடிகளுக்கென்றே தனிச் சிறப்பாய் அமைந்தது.

கருத்துக்கேற்ற எழுத்து நடை அடிகளால் மேற்கொள்ளப் பட்டு வந்தது. புதுக்கதை நூலாகிய 'கோகிலாம்பாள் கடிதங்கள்' ஒரு வகையான எளிய செந்தமிழ் நடை வாய்ந்தது. இது கதைக் கருத்துக்கேற்ற தமிழ் நடை; அப்படியே 'சிந்தனைக் கட்டுரைகள்' என்னும் நூல் அடிகளார் எழுதிய ஆங்கிலக் கட்டுரைகளின் மொழி பெயர்ப்பு. மொழிபெயர்ப் பாயினும் கட்டுரைக் கேற்ற தமிழ்நடை அது; 'சிவஞானபோத ஆராய்ச்சி' என்பது மிகு நுட்பப் பொருள் அமைந்தது. அந் நுண்பொருளை உணரும் தவம் உடையார் மிகச் சிலரேயாதலின் அதற்கேற்ற தமிழ்நடை அதனிற் கையாளப்பட்டது; 'அறி வுரைக் கொத்து' என்னும் நூலிலும் 'சிறுவர்க்கான செந்தமிழ்' போன்ற நூல்களிலும், மாணவர்க்காகச் சில எழுதப்பட்டவை

களிலும், அவர்களின் பொருட்டே அமைந்த தமிழ்நடை வேறு வகையாக இருக்கிறது.

இங்ஙனம் கருத்துக்களுக்கும் கற்பார்க்கும் ஏற்ற வெவ்வேறு தமிழ்நடை அடிகளால் மேற்கொள்ளப்பட்டாலும், பொது வகையாக, 'இது அடிகளின் தமிழ்நடை' என்று தெரிந்து கொள்ளும்படி, தமிழ் அழகு அவற்றிற் சிறந்திருந்தது.

நடையின் அமைப்பு :

தமிழ் அழகில் 'குறியீடுகள்' போன்ற சிலவற்றைத் தவிர மற்றவையெல்லாம் தனித் தமிழ்ச் சிறப்பே பொருந்தியிருக்கும்.

பழைய தமிழ்ச் சொற்களை இடையிடையே விரவி, வழக்குக் கெடாமல் அடிகளார் எழுதுவார்.

இலக்கண இலக்கியத் தருக்கச் சிறப்புகள் மிகுந்திருக்கும்.

கருத்தழகுகள், கலையழகுகள், புலமை அழகுகள் விஞ்சி யிருக்கும்.

நீளப் பேசுவோர்க்கு ஏற்றபடி நீண்ட தொடரும், ஆராய்ச்சி முடிபுகளுக்கு ஏற்றபடி இடைநிலைத் தொடரும், பேச்சுகளுக்கு ஏற்றபடி சிறிய தொடர்களும், பேசுவோர்க்கு ஏற்றபடி கொச்சைத் தொடர்களும், இலக்கணத் தொடர்களும், மறுப்பழகுகளுக்கு ஏற்றபடி உறுத்தும் சொல்லழகுகளும், அடிகளார் நடையில் அங்கங்குங் காணப்படும்.

நக்கீரர், இளம்பூரணர், சேனாவரையர், அடியார்க்கு நல்லார், நச்சினார்க்கினியர், பரிமேலழகர், சிவஞான முனிவர் போன்றாரின் உரைகள் அடிகளாரின் நூலில் இடையிடையே மின்னும்; சங்க நூல் சொற்கள் தொடர்கள் நடைகளும் இடையே மிளிர்ந்துவரும்.

சொற்கள், சொற்றொடர்கள் முதலியன கருத்துக்களுக் கேற்றனவாய் அமைந்திருக்கும்.

'சாரியை' 'சந்தி' முதலியனவெல்லாம் எவ்வெவற்றிற்கு எவ்வெவை விதிகளாக மரபுகளாக முன்னோர் கூறினரோ, அவ்வவற்றை அவ்வவற்றின் கருத்தும் இணக்கமும் அறிந்து எழுத்து நடை மேற்கொள்ளப்படும்.

இன்னோசை வழுக்காமல் சொல்லழகுகளை அடிகளார் பதித்துத் தமது நடையில் ஒருவகையான ஓசையினிமை காணும்படி சமைத்தெழுதுவார்; அளபெடைகளும் இதற்காகவே பெரும்பாலும் அமைந்துவரும்.

மாணவர்க்கும், கற்பார்க்கும் உணர்வு சலியாதபடி கருத்துக்களைக் கொண்டு போகும் முறையில் அடிகளின் விளக்க நடை அமைந்திருக்கும்.

மரத்தில் அரும்பு, மலர், காய், கனி முதலிய உறுப்புக்கள் காணப் படுவதுபோல், அடிகளார் தமிழ் நடையிலும் அரும்பு நடை, மலர் நடை, காய் நடை, கனி நடை போன்ற எழுத்து நடைகளைக் காணலாம்.

மக்கள் புரிந்துகொள்வதற் காகவும் உணர்ச்சிகளையும் சுவைகளையும் தெரிந்துகொள்வதற்காகவும், நூல்கள் எழுதப் படுகின்றன; தெளிவுகளைக் கருத்திற் கொண்டு, தமிழ்ச் சுவையும் மாறுபடாமல் நடை அழகை அடிகளார் மேற்கொள் வார்.

முன்னால் இன்ன தொடர் அமைப்பது, அதனை விளக்கும் முறையில் பின்னால் இன்ன தொடர் அமைப்பது என்ற காரண காரிய முறை பிறழாமல் அவர் எழுத்து நடை அமைந்திருக்கும்.

முத்தமிழ்ப் பாகுபாடு, நடையெங்கும் சிறந்து, அடிகளார், 'முத்தமிழ் வித்தக'ராய் விளங்குவார்; கருத்துத் தொடர்புக்கு ஏற்ற தொடர்ந்த மென்னடை, இசை கேட்பது போன்ற இனிமை கவின்ற மொழி நடை, மக்கள் உரையாடுவது போல் அமைந்த பேச்சு நடை முதலியனவெல்லாம் அடிகளின் எழுத் தில் மின்னும்;

தொடர்ந்த வாழ்க்கை யொழுக்கம் உடையவர்களானமை யால், அடிகளின் எழுத்து நடையில் நீண்ட தொடர்கள் மிகுதி யாய் இருக்கும்; ஒரு பகுதி முழுமையும், பல பக்கங்கள்கூட, ஒரே தொடராகக் காணப்படும்.

(சைவசித்தாந்த ஞானபோதம், பக். 120-125)

எவ்வளவு நீளத் தொடராயினும் எழுவாய், பயனிலை, திணை பால் இடைச்சொல் இயைபுகள், முடிக்கும் வகைகள் பிழைபடா.

அடிகளார் நூல்களிற் பெரும்பகுதி மறுப்பு நூல்களே யாதலால், அவர்களின் நூல்நடை, பெரும்பாலும் விறுவிறுப்பும் கவர்ச்சியும் வாய்ந்ததாயிருக்கும்; கற்பார்க்கும் பெருஞ்சுவை விளைக்கும்.

தொல்லாணை நல்லாசிரியரின் எழுத்து முறையே அடிக ளார் எழுத்து முறை!

இங்ஙனமெல்லாம் பல துறைகளிலும், பல திறன்களிலும், அடிகளார் எழுத்து, இலக்கியச் சுவை முதலியன சிறந்து,

இலக்கணக்கருத்து அழகுகளுடன். தமிழ்ச்சுவை கவின்று, மேம்பட்டிருக்கும்.

சில எடுத்துக்காட்டுகள் :

1. விரிந்து கிடப்பனவாகிய நுண்பொருட் பரவை யெல்லாந் தமிழ் நூன் மரபு பற்றி யாராய்துமென மனவெழுச்சி கொண்டு புகுவார்க்குச் சிறுகிய வாழ்நாளும் பெருகிய பிணியு முண்மையின், பெருந்தவத் தொல்லாசிரியர் அருட்குறிப்பு நிகழவவர்க்கவற்றைச் சுருங்க வறிவுறுத்துவார், அருட்பொருட் பரவையை யிரண்டு கூறுபடுத்து அகத்திணை புறத்திணையெனப் பெயர் நிறீஇ, அப் பகுதி யிரண்டனு ளுலகியற் பொருண்முழுவதூஉம் பிறவுஞ் செறியத் துறுத்து விளக்குவாராயினர். இங்ஙனம் பொருளிய றெரிக்கு மிலக்கணங்க ளெல்லாம் முடிய வெடுத்துக்கொண்டு முன்னொடுபின் மாறுகோளின்றி வரம்பு குறித்துரைக்கு நூல், கொழிதமிழ்த்துறை பழுதறக் கண்டு முழு முதலறிவினராய் விளங்கிய ஆசிரியர் தொல்காப்பியனர் இயற்றிய தொல்காப்பியம் ஒன்றுமேயாம்.

(சோமசுந்தரக் காஞ்சியாக்கம், பக். 20)

2. 'என்னடி, ஒன்றும் அறியாத அம்முக்கள்ளிபோற் பேசுகிருய்? பாவி உன்னைக் கட்டாமல் இருந்தால் என் தமையன் இன்னும் உயிரோடே இருப்பான்; உன்னைக் கட்டின மறு வருஷமே அவன் இறந்துபோனன்; நீ மாத்திரம் குத்துக் கொழுக்கட்டைபோல் இருக்கின்ருய்!' என்று சினந்து கூவினள்.

(கோகிலாம்பாள் கடிதங்கள், பக். 25)

3. பசுமையான பச்சிலைப் போர்வை மேற்கொண்டு பருத்துயர்ந்தடர்ந்த புளியமரத் தோப்புகள் ஆங்காங்கு இருக்கின்றன. அத் தோப்புகளை அடுத்துச் சிறுசிறு குன்றுகளும் உயர்ந்த மலைகளுந் தோன்றுகின்றன. ஒரோவோர் இடங்களில் வாழைத் தோட்டங்களும் வெட்ட வெளியான இடங்களும் இருக்கின்றன. அருவியோட்டங்களாயினுங் கான்யாறுகளாயினும் அங்கில்லை.

(சிந்தனைக் கட்டுரைகள், பக். 3)

4. அதற்குத் திகழ்கலை ''மக்களுடைய கை, மருந்துகள் கொடுக்கும்; ஆனல், மற்றையதை ஆண்டவனே முடிவு செய்ய வேண்டும். உங்களுடைய தோழி பிழைத்தாலும் பிழைக்கலாம், அல்லது செத்தாலும் சாகலாம்; அதனைக் கடவுளே அறிவார் கடவுளே பெரியவர்'' என்று விடை கூறி, இந்த வகையான பேச்சினல் மருத்துவஞ் செய்யுந் தன் உண்மைக் குணத்தையுஞ், சிறிது நேரத்திற்குமுன் தவருமற் பலிக்குமென்று

தான் பெருமை பாராட்டிக் கூறிய தன் மருந்துகளின் மதிப்பை யும் பாதுகாக்கப் பார்த்தாள்.

(நாகநாட்டரசி. பக். 170)

5. இறைவன் அறிவொளியுடையவனாதல் போலத் தீயும் ஒளியுடைமையானும், அவன் அவ்வறிவொளியால் உயிரை மறைத்த அறியாமை வல்லிருளைத் துரக்குமாறுபோல இதுவுந் தனதொளியாற் கண்ணை மறைத்த காரிருளை நீக்குதலானும், இறைவன் உயிரினைப் பற்றிய வாலாமையினைச் சுட்டெரித்துத் தூய்தாக்குமாறு போலத் தீயும் நிலத்தின்கட் சேருங் குப்பை கூளங்கள் அழுக்குகள் எல்லாவற்றையும் கொளுத்தி நீருக்கித் தூய்தாக்குதலானும், அங்ஙனம் முதல்வன் வாலாமையினைத் தூய்தாக்கும் வழி அதனாற் றான் சிறிதும் பற்றப்படாது தான் அதனைத் தூய்மைப் படுத்துமாறுபோலத் தீயும் தன்னால் எரிக்கப்படும் அழுக்குகளாற் பற்றப்படாது தான் அவற்றைச்சுட்டுத் தூய்மை செய்தலானும், இறைவன் படைத்தல் காத்தல் அழித்தலென்னும் முத்தொழில்கள் புரியுமாறுபோலத் தீயின் வெம்மையும் நீரினும் நிலத்தினும் புற்பூண்டுகளினும் உயிர்களின் உடம்புகளினும் ஓரளவு படப் பரவி நின்று படைத்தல் காத்தல்களையும் தான் அவற்றின்கண் நிற்கவேண்டும் அளவின் மிக்குத் தோன்றிய வழி அவற்றை அழித்தற்றொழிலையும் நிகழ்த்துதலானும், இறைவன் வெய்யனாய்ச் சிவந்த அருள்நிறம் உடையனாதல் போலத் தீயும் வெய்தாய்ச் சிவந்த நிறம் வாய்ந்து நிற்றலானும், இறைவன் நீல அருள்நிறம் வாய்ந்த அருட்சத்தியைத் தன்னுள் அடக்கிவைத்திருக்குமாறு போலத் தீயும் நீலநிறம் பொருந்திய தண் நீரினைத் தன்னுள் அடக்கி வைத்திருத்தலானும், இறைவன் அருவம் உருவம் இரண்டற்கும் பொதுவான அருவுருவம் உடையனாதல் போலத் தீயும் அருவம் உருவம் இரண்டற்கும் பொதுமையாய் நிற்கும் பிழம்பு வடிவு உடையதாய் நிற்றலானும், இறைவன் உலகுயிரெல்லாம் ஒருங்கு நிறைந்து நிற்றலும் அன்பர்க்கு அருள்புரிதற் பொருட்டு ஒரோவிடத்து முனைத்து விளங்கித் தோன்றுதலும் உடையனாதல் போலத் தீயும் எல்லாப் பொருள்களினும் ஊடுருவி நிற்றலும் உயிர்கட்குப் பயன்படு முகத்தால் ஒரோ வயின் விளங்கித் தோன்றுதலும் உடைத்தாகலானும், அகத்தே உயிர்களின் அறிவை விளக்குதற்கு இறைவனதொளி இன்றி யமையாது வேண்டப்படுதல்போலப் புறத்தே கண்ணறிவை விளக்குதற்குத் தீயினொளி இன்றியமையாது வேண்டப்படுதலானும் தீ ஒருவாற்றால் இறைவனியல்போடு ஒப்புமையுடைத் தென்பது அறியப்படும்.

(சிவஞானபோத ஆராய்ச்சி, பக். 142)

6. கோமாளி: ஐயையோ: இந்தக் கோவுரம் பூதமா? இதின் வாய்க்குள்ளவா நாம்ப எல்லாம் நுழையப்போறோம். அம்மா! மாராசா! நான் வரமாட்டேன். என்னை விட்டுடுங்கோ! என் பெண்டாட்டிக்கி யாரு துணை? எனக்குச் சாமியும் வேணும் பூதமும் வேணும்.

(அம்பிகாபதி அமராவதி, பக். 75)

7, சிறார் இழைத்து விளையாடும் மணற்சிற்றிலிலே நுண்ணறிவு வாய்த்த தச்சரியற்றும் அழகிய மாடங்கள் காணப்படுதலுண்டோ? எந்த நுண்பொருள் எவர்வாயின் வருமோ அஃது அவர்பாலே ஆராயற்பாலதாம். அஃதொழிந்து ஓர் அறிவுடையாரிடத்துப் பெறப்படும் ஓரரும்பொருளை ஏனையோர் அறிவிலாரிடத்துக் கேட்க முந்துவாரைப்போல் தமிழ் நூற்களிற் குறிக்கப்படும் அந்தரங்க மெய்ப்பொருட்குப் பிரமாணம் வடநூலிற் றேடுதல் பெரிதும் நகையாடி இகழற்கே ஏதுவாம்.

(பண்டைக்காலத் தமிழரும் ஆரியரும். பக். 45)

8. நாயகரவர்கள், 'சைவ சமயாசிரியர் பெயரைச் சிறிதும் மாற்றாமல் இவர் தமக்கு வைத்துக்கொண்டு அதனை அப்படியே எழுதச் சொல்லுகிறார். அஃது அவ் வாசிரியரை இகழ்ந்ததாகும். ஆதலால், அவர் வேண்டியபடி யான் செய்ய வில்லை' என்று விடை கூறினர். அது கேட்ட துரைமகனார் நகைத்து, 'இவர் தமக்கு வழங்கும் பெயரைச் சொன்னால், அஃது உங்கள் சமயாசிரியர் பெயர்; அதனை அப்படியே சொல்லக்கூடாது என்று நீர் சொல்வது பொருத்தமாயில்லையே' என்றார். அதற்கு நாயகர், 'நல்லது? ஐய, உங்கள் மதத்தைச் சேர்ந்த ஒருவர் 'என் பெயர் கர்த்தர் ஏசு (Lord Jesus) என்று எழுதச் சொன்னால் தாங்கள் அதனை ஒப்புவீர்களா?' என்று எதிர் வினவினர். அவ் வறிவுரை செவிப் பட்டதும் அத் துரை மகனார், ''ஆ! அப்படியா! 'கர்த்தர் ஏசு' என்னும் பெயரை நம் போன்ற ஒருவர் அப்படியே தமக்கு வைத்துக்கொள்வது பெருங் குற்றம்: அப்படியே உங்கள் சமயாசிரியர் பெயரை இவர் சிறிதும் மாற்றாமல் வைத்துக் கொண்டதும் பெருங்குற்றந்தான்'':

(சோமசுந்தர நாயகர் வரலாறு, பக். 44)

9. ஆண்டவனையன்றி அணுவும் அசையாதாயின் பொய்யராகிய தீய மக்கள் சிலர் நல்லோனுக்கு எங்ஙனம் தீது செய்ய மாட்டுவார்? உண்மை வடிவாய் விளங்குங் கடவுள் உண்மை திறம்பாதவன்மாட்டு மிக முனைத்து விளங்குமாதலின் அந் நல்லோன் முன்னர்த் தீயோர் திரண்டு செய்த தீயவையெல்லாம் பகலவன் முன்னர்ப் பாயிருள் மாய்ந்தாற்போல முதலறக் கெட்டு ஒழியும்.

"விளக்குப் புகஇருள் மாய்ந்தாங் கொருவன்
தவத்தின்முன் னில்லாதாம் பாவம்"

என்னும் நீதியுரையைக் கடைப்பிடித்துத் தீயோர்க்கு அஞ்சி நல்லவற்றை நெகிழவிடாது, அவற்றைக் கிளர்ச்சியோடும் சிக்கெனப் பிடித்தலே உயிர் ஆற்றலை மிகச் செய்வார்க்கு உரிய தாகும். மலையுருண்டாலுங் கடல் புரண்டாலும் நிலன் அதிர்ந் தாலும் புயல் அடித்தாலும் அச்சம் அடையாமல் உண்மை நெறியில் உறைத்து நிற்கவேண்டும். எல்லாம் வல்ல இறைவனையே ஒப்பற்ற துணையாக நாடி நிற்கப் பெறுகுவமாயின், நாம் எதற்கும் அஞ்சா மனத்திட்பத்தை அடைவம். இதுவே தான் நாம் அச்சம் அடையாமல் இருத்தற்கு இலேசான வழி யாமென்க.

(யோக நித்திரை, பக். 30.)

10. இற்றைக்குப் பத்தொன்பதாண்டுகட்கு முன் யாம் வடநாடு சென்று அங்குள்ளார்க்குச் சைவசித்தாந்த உண்மைகளை விரிவுரைகள் வாயிலாக எடுத்துச் சொல்லல் நேர்ந்தது. அங்கே கற்கத்தாவிலிருந்து இமயமலைமேல் துர்ஜலிங்கத்திற்கும், பின்னர் அங்கிருந்து கீழிறிங்கிக் காசிக்கும், அங்கிருந்து அரத்துவாரத்திற்கும், அங்கிருந்து மறுபடியும் இமய மலை யடிவாரத்திலுள்ள துரோணாசிரமத்திற்கும், அங்கிருந்து தில்லி ஆக்ரா வம்பாய் முதலான நகரங்களுக்கும், பிறகு சிக்கந்தராபாக்கம் ஐதராப்பாக்கங்களுக்குஞ் சென்று பின்னர்ப் பல்லாவரந் திரும்பினேம்.

(மக்கள் நூறுண்டு உயிர்வாழ்க்கை, பக். 327)

அடிகளார் நடை:

அடிகளார் நடை, பொதுவாகக் கருத்தை மட்டும் விளக்கும் மொழிநடை யன்று; மொழிக்குரிய இயல்புகள், சுவைகள், முறைகள், தொல்லாசிரியர் மரபுகள் அமைந்து, இலக்கிய நடையாய்க் கருத்தினிமைகளுடன் கூடிய தீஞ்சுவை நடை; இயற்கை நடையும் அத்தகையது.

ஒரு மரம் அல்லது செடியின் நோக்கம், மலர் தருதல் காய் தருதல் என்பது. ஆனால், அந்த மரம் அல்லது செடி கொடிகள், பல வேறு வகையான வடிவுகளும் நிறங்களும் பொருந்தி அழகுங் கவின்று விளங்குகின்றன. அப்படியே, மற்ற உயிரினங் களின் நிலைகளும்!

'நோக்கம்' என்பது 'பராசத்தி'யின் நிலை. 'அழகு' என்பது 'திரோதான சத்தி'யின் நிலை. ஒரு சத்தி இவ்வாறு இரண்டு பிரிவாய் நோக்கமும் அழகும் கொண்டு பயன்படுகிறது. உயிர்

களுக்குக் கவர்ச்சியைத் தந்து ஈடுபடச் செய்து உள் நோக்கத்தைத் தெரிந்துகொள்ளும்படி செய்தலே அவற்றின் கருத்து.

பண்டைக்காலம் தொடங்கி அவ்வப்போது தோன்றியருளிய எல்லா ஆசிரியர்களும் இதனைப் பின்பற்றி யிருக்கின்றனர். சரியாகத் தெரிந்துகொண்டால், 'கருத்தை விளக்குதல் மட்டும் மொழி நடையின் போக்கன்று, அது வெறும் நடையாகவே இருக்கும்' என்று அறிந்துகொள்ளலாம்.

பெரும்பாலார், எழுதும் நடை, கருத்தை மட்டும் விளக்கும் பொது நடையாய் இருக்கிறது. சுவைச் சிறப்பை அடையவில்லை. கைக்கு அணியும் வளையல் முதலியன கூட வளைந்த தன்மை மட்டும் உடையனவல்ல; எத்தனையோ வகையான பூ வேலைகளும் அழகுகளும் வாய்ந்தவை. கண்ணாடி வளையல்கூட இங்ஙனம் இயற்கைப் பொருள்களைப் போல அணிநலம் வாய்ந்தனவாய் (Ornamental) உள்ளன. இந்த அழகுச் சிறப்பு கவர்ச்சிச் சிறப்பு; அதனாலேயே அவை 'அணிகலன்' என்று பெயர் பெற்றன.

இயற்கையிற் காணும் அழகு முறைகள் மொழியிலும் தகுதியாக அமைந்திருப்பது தமிழ்மொழி! தமிழ்மொழியைக் கையாளுவோர் சுவைத் திறன் இன்றி, 'எல்லாரும் புரிந்து கொள்வதே போதும்' என்று எழுதுவதானால், 'பாட்டு' என்பதே தமிழுக்குத் தேவையில்லை. அதன் யாப்பிலக்கணங்கூட, அணிகளோடும் மரபுகளோடும் பொருந்தி வருதலை நினைவு கூர்க. அவ்விரண்டும் இணைந்த இணையே யாப்பாதலின், தொல்காப்பியத்தில் அணிக்கும் மரபுக்கும் தனி அதிகாரம் வகுக்கப்படவில்லை. அணியையும் மரபையும் செய்யுளில் இரண்டறக் கலப்பித்துச், 'செய்யுள் இயல்' மட்டும் பொருளிலக்கணத்தில் வந்தது.

அழகு மட்டும் வாழ்க்கைக்குப் போதாதுதான். கருத்துத்தான் முக்கியம். வாழ்க்கைக்கு முக்கியமாதலின், பொருளதிகாரம் தனி அதிகாரமாகக் கொள்ளப்பட்டது. பொருளை வெளிப்படுத்தவே யாப்பு வேண்டப்படுதலின், அதனை வடிவு கொள்ள வைக்கும் மொழி நடைகள் இன்ன இன்ன இயல்புகளும், முறைகளும், அணிகளும், மரபுகளும் கொண்டவைகளாக அமைய வேண்டுமென்பது கட்டாயமாகும். நடையைச் சுவைபடக் கையாளாவிட்டால் அது தமிழாகாது; இயற்கையும் ஆகாது; எழுதுவோர் ஆசிரியரும் ஆகார்; கருத்திலும் மொழியிலும் பலப் பல சிறப்புடையவர்கள், ஆசிரியர் மறைமலையடிகளார்!

கருத்துக்களை மட்டும் எடுத்துக் கொண்டால், மொழிநடைகளின் வேறுபாடுகளைப் போலவே கருத்துக்களிலும் பல வேறுபாடுகள் இருக்கக் காணலாம்; பிரிவுகள் பல; வாழ்க்கை ஒழுக்கத்தோடு தொடர்புடையனவாய், கற்பவர் திறத்துக்கேற்பக் கருத்துக்களைக் கொண்டு போகும் சிறப்புக்கள் உடையனவாய், உலகியலோடும் அருளியலோடும் மாறுபடாதனவாய், இயற்கை நலம் பொருந்தித் திகழ்வனவாய்ப் பல திறன்களை அவை உடையனவாகும். ஆசிரியர் அடிகளார் அச் சிறப்புகளிலெல்லாம் வல்லுநரே!

பெரும்பாலார் எழுத்து நடைக்கும், அடிகளார் எழுத்து நடைக்கும் இவ் வேறுபாடுகள் அமைந்து கிடப்பதனுல், மொழித்திறம் முட்டறுத்துச் செல்லும் தமிழ்ச் சுவைக்கும் அவற்றில் இட்டு எழுதப்படும் கருத்துக்கள், ஆராய்ச்சிகள், முடிபுகள், மறுப்புகள் முதலிய கருத்து வகைகளுக்கும், தமிழ் மக்கள் பலர், அவர்கள் நூல்களை ஆழப் பயின்று இருவகை நலங்களும் பெறுகின்றனர்!

கருத்து விளக்கத்துக்கு 'நலங்கள்' வேண்டப்படும். எழுத்துத் திறத்துக்கு 'மொழியழகு' வேண்டப்படும். உயர்ந்த கருத்துக்களையெல்லாம் பாட்டில் எழுதிய ஆசிரியர்களும் அவற்றிற்கு உரை விளக்கம் செய்த நக்கீரர் முதலிய உரையாசிரியர்களும் இவ்விரு வகைச் சிறப்புக்களையும் தத்தம் நூல்களிலும், உரைகளிலும் பின்பற்றி யிருக்கின்றனர். சங்க நூலகளைப் பதிப்பித்த பேராசிரியர்கள் இச் சிறப்புக்களை நன்கு உணர்வாராயினும், தம் எழுத்துக்களில் பெரும்பாலும் அவற்றைப் பின்பற்றவில்லை. மக்கள் புரிந்து கொள்வது ஒன்றே அவர்கள் எழுத்தின் கருத்தாய் இருந்திருக்கின்றது. மொழியழகுகளைப் பெரும்பாலும் அவர்கள் எண்ணிப் பார்க்கவும் இல்லை; சிலர்க்குப் பயிலவும் வாய்ப்பு ஏற்படவில்லை.

ஆனுல் ஆசிரியர் அடிகள் ஒருவர் மட்டுமே இருவகைச் சிறப்புகளையும் நன்கறிந்து, நேரம் கண்டு, பயின்று, சுவைத்திறம் பெருக உரை நடை நூல்களை இயற்றிய நல்லாசிரியரானுர். சுவை நலம் வேறு, பதிப்பு நலம் வேறு; தொல்லாசிரியர் மரபையே பயிற்சியினுல், இவர் நெடுகச் சுவையாகப் பின்பற்றுவதனுல், மொழிச் சுவை என்பதற்கு அடிகள் நடை பெரிதும் துணை செய்தது; இளமையிலிருந்தே இவர்களுக்கு இம் மொழியழகு நன்கு வாய்த்துவிட்டது; அது, பிறவிப் பேறுமாகும்.

**தனித்தமிழ் நடை :**

அடிகள் மிகப் பழைய ஆசிரியர்களையே பின்பற்றுபவர்; பின் வந்த ஆசிரியர்களிற் பழைய பேராசிரியர்களைப் பின்பற்று

வோர் எவரேனும் இருப்பாராளுல், அவர்கள் நன் முறைகளை யும் போற்றிக்கொண்டு, அவர்களைப் போலவே எழுதுவார். பிற் காலத்துச் சிவஞான முனிவரரின் உரைநடை, பெரும்பாலும் அடிகளார் நடையில் மலர்ந்திருக்கிறது. பழைய நக்கீரர் நடையும் அவ்வாறே காணப்படும்.

மிகப் பழைய தமிழாசிரியர் அக்கால இயல்புக்கு ஏற்றபடி தமிழ் மொழியைத் தனித் தமிழாகவே வழங்கி இன்புற்ருர்கள். அதில் ஒரு தனியின்பம் காண்பதும் அவர்கள் இயல்பாய் இருந்தது. அடிகளார் தம்முடைய எல்லா நூல்களையும் பிற் காலத்தில் தனித்தமிழாய் ஆக்கிவிட்டார். மொழி மட்டு மல்லாமல் கருத்தும் தமிழ்க் கருத்தாகவே எழுதி வந்தார்.

தமிழ்க் கருத்து, தமிழ் நாகரிகம், தமிழ் வாழ்க்கை முதலியன வெல்லாம் சிறப்பாய் இன்னவையென்று, கதிரொளி போல் புலப்படும்படி, பிரித்து விளக்கினர். புதிய புதிய தமிழ்ச் சொற்களையும், கலைச் சொற்களையும் உண்டாக்கி அவை எளிதிற் பொருள் விளங்கும்படி இடையிடையே சேர்த்து மக்கள் புரிந்து கொள்வதற்கும் வழி செய்தார். அதற்காகத் தமிழ்ச் சுவையை அவர் குறைத்துக் கொள்ளவில்லை. மிக எளிய நடையானலும், அரிய நடையானலும் தமிழ் நலத்துக்கு எவ்வகைக் குறைவும் உண்டாகாதபடி, சுவை பொருந்திய நடை எழுதுவதே அடி களின் இயல்பு. நடை தனித் தமிழாய் இருந்தால் அதன் சுவை மிகுதியாகும் என்பதை அடிகளார் நன்கு உணர்ந்திருந் தார்கள்; தொல்காப்பியர்,

> ''வடசொற் கிளவி, வடவெழுத் தொரீஇ
> எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே''

என்று (எச்சவியல், 5) அருளிச் செய்தது, ஏனைய மொழிகளில் வந்த பெயர்கள் முதலிய குறியீடுகளைத் தமிழில் எழுதும்போது, வட எழுத்துக்களை நீக்கித் தமிழ் எழுத்தால் எழுதலாம் என்று குறிப்புத் தந்திருக்கிருர்.

**இலக்கண நடை:**

அடிகளார் எதை எழுதினுலும் அதில் இலக்கணப் பிழை இராது. தருக்கமும் இதில் அடங்கும். இலக்கணத்தில் பழைய ஆசிரியரான தொல்காப்பியர் முடிவுகளையே அடிகளார் மேற் கொள்வார்.

''சொற் பொருள்களில் ஐயம் வந்துழியெல்லாம், எல்லார்க் கும் மேற்கோளா யொப்ப முடிந்த 'தொல்காப்பிய' முதலான

பண்டை நூற்கோள் பற்றியும், 'களவியல்' முதலான உரைக் கோள் பற்றியுமே துணிதல் வேண்டும்".

(சோமசுந்தரக் காஞ்சியாக்கம், ஆனந்தக் குற்றம், ii-பக். 16)

எடுத்துக்காட்டாக, 'மக்கள் சுட்டு ஒன்றே உயர்திணை; தெய்வஞ் சுட்டிய பெயர்நிலைக் கிளவி வேறு' என்னும் தொல்காப் பியனர் கொள்கையையே அடிகளார் எடுத்துக் கொள்வார்.

(சோமசுந்தரக் காஞ்சியாக்கம், பக். 43)

அழகு நடை :

கருத்தழகுகள், கலையழகுகள், புலமை அழகுகள் முதலியன இதில் மேம்பட்டிருக்கும்; 'நோக்கம் வேறு, அழகு வேறு' என் பது முன்பே தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

சிவஞான சித்தியார்க்குச் சிவஞான முனிவரரின் உரை ஒன்றுண்டு; அதில் அவர், செய்யுட்களுக்குச் சொற்பொருளுரை தரவில்லை; மற்றுக் கருத்துத் தொடர்பு, செய்யுள் இயைபு, சமயக் கொள்கைகளின் நுண்பொருள் விளக்கம்; புலமைச் சிறப்புகள் தோன்ற விளக்கிச் செல்கின்றார்; மிக்க பயனுடைய உரை; அவர் எழுதிய தொல்காப்பியச் சூத்திர விருத்தி இலக் கண விளக்கச் சூருவளி முதலியவற்றிலும் இத் திறங்கள் காணப்படும்; ஆசிரிய ரடிகளாரும் இச் சிறப்புக்களைப் பாராட்டி,

"தொல்காப்பிய முழுமுதலோ டிங்ஙன மாறுகொண் டுரைத்திட்ட விடங்களெல்லாம் புரைபட்டுப் பொய்யா யொழியு மாறு, ஆசிரியர் சிவஞான யோகிகள், புலமை மலிய வெழுதிய தொல்காப்பியச் சூத்திர விருத்தி, இலக்கண விளக்கச் சூருவளி முதலிய அரிய நூல்களிலெல்லாம் இனிது விளங்கும்."

(சோமசுந்தரக் காஞ்சியாக்கம், பக். 43-4)

பேச்சு நடை :

கருத்துத் தொடர்பாய் இருந்தால் நீண்ட தொடர் அமை யும். (சிவஞானபோத ஆராய்ச்சி எடுத்துக்காட்டில் இது காட் டப்பட்டது) இடையிடையே முடிக்கப்பட வேண்டிய ஆராய்ச்சி யாய் இருந்தால் இடைத்தொடரும் சிறு தொடரும் பொருந்தும் (நாகநாட்டரசி எடுத்துக்காட்டில் இதனைக் காணலாம்.) பேசு வார்க்கு ஏற்றபடி கொச்சைத் தொடர்கள் போன்றன, 'கோகி லாம்பாள் கடிதங்கள்' என்பதில் பக்கம் 45-ல் அயல்மொழிக் குரிய பாரசீகர் ஒருவர் பேசுவதுபோல் வருகின்றன.

"அய்யா! நம்ப பெஞ்சாதி நம்பளெக் காட்டிலும் தம்பிள் நல்லாப் பேசுவா; நம்பளிக்கித் தம்பிள் நல்லாப் பேச வருற தில்லை; அதுக்காக நீங்கோ நம்பளே ரோம்ப மன்னிச்சுக்

கொள்ளணும்; இந்த அம்மாவை பார்த்த ஒடனே எங்க மூத்த பெண்தா உசிரோடே வந்திட்டாள்னு நாங்க ரொம்ப ஆனந்தப் பட்டிருக்கிறோம். அய்யா! நீங்கோ மெத்த தயவு பண்ணி அடிக்கடி இந்தம்மாவெ நாங்க பார்க்கும்படி உபகாரம் பண்ண னும், அப்பொதா எங்க துக்கம் போவும்.''

**இன்னோசை நடை :**

ஓசைகூட வழுக்காமல் நடை யெழுதுதலில் பாட்டுக்கு எவ்வளவு உரிமையுண்டோ அவ்வளவு உரைக்கும் உண்டு; இசை நிறைக்கும் அளபெடைகள் பாட்டில் வருதல் போலவே (திருவாசக விரிவுரை பக். 287) உரைநடையிலும் அளபெடைகள் வரும்.

(சோமசுந்தர நாயகர் வரலாறு, பக். 31)

ஓசை வழுக்காமல் உரைநடை எழுதுவதிற்கூட அடிக ளார் நடை ஏனையோர் நடைகளைவிடப் பீடுடையதாகும்.

''வல்லோசையின்றித் தமிழ்ச் சுவை துளும்பும் இனிய மெல்லோசை வாய்ந்த நடையில் ஆக்கப்பட்டிருத்தலின் சிந்தாமணியுந் திருத்தொண்டர் புராணமும் ஒற்றுமையுடைய வெனவே உரைக்கலாம்'' என்பது அடிகளார் சொல்.

(அம்பிகாபதி அமராவதி, பக். 72)

**முன்னோர் மொழி நடை :**

பழைய நூலாசிரியர் உரையாசிரியர்களின் எழுத்து நடைகள், அடிகளார் உரைநடையில் மின்னி வருதல் ஒரு தனிச் சிறப்பு! நக்கீரனார் களவியலுரை பற்றி அடிகளார்க்கு மிக்க மதிப்புண்டு.

(மாணிக்கவாசகர் காலம், 448-68, 608)

பாச்சுவை மேவிய அவர் நடைச் சிறப்பும் மறுப்புத் திறன் மேவிய பிற்றைச் சிவஞான முனிவரர் நடைச் சிறப்பும் அடிகளார் நடையில் அங்கங்கும் மிளிருப; அடிகளார் நடைச் சுவைக்கு இவ்விரு பேராசிரியர்களின் எழுத்துக்கள், முக்கிய வழிகாட்டிகளாய்த் துணை புரிந்திருக்கின்றன. (சோமசுந்தரக் காஞ்சியாக்கம் முழுதும்.)

**விளக்க நடை :**

'சிந்தனைக் கட்டுரைகள்' என்னும் ஆங்கில மொழி பெயர்ப்பு நூலில், 'படைப்பின் வியத்தகு தோற்றங்கள்' என ஒரு பகுதியுண்டு; சைவ சித்தாந்தக் கருத்துக்கள், அம் மொழி பெயர்ப்பு நூலிலும் அங்கங்கே இனிது விளக்கப்படுகின்றன;

வேறோராசிரியரானால், மொழி பெயர்ப்பே யாயினும், அப் பகுதி விளக்கமே மாறுண்டிருக்கும்.

'கோகிலாம்பாள் கடிதத்'தில், கோகிலாம்பாளின் அறிவாற்றலைப் பல முகமாக ஆசிரியர் அங்கங்கும் விளக்கிச் செல்கின்றார். திருமுறைகளின் இசைச் சிறப்பு, பிறப்பிறப்பற்ற சிவபிரானது முழுமுதன்மை, தமிழ் நூல்களின் மாட்சி, திருவள்ளுவர் உயர்வு முதலியனவெல்லாம் கோகிலாம்பாளின் வாய்மொழியாக விளக்கப்படுகின்றன.

'அம்பிகாபதி அமராவதி' நூலில் அரங்கேற்றக் கலைச் சிறப்பு, சொற்பொருட்கலை மேன்மை, காப்பியங்களின் வேறுபாடுகள், இலக்கணம் என்பதன் கருத்து, தொல்காப்பிய மாட்சி முதலியன நன்கு விளக்கப்பட்டிருக்கின்றன.

(பக். *40-50, 69-73*)

**காரண காரிய நடை :**

சொற்றொடர்கள் ஒன்றன்பின் ஒன்றாய்த் தொடரும்போது, கருத்து விளக்கங்களைக் காரண காரிய முறையில் தொடர்ந்து எழுதினால், அஃது அறிவு முறையாதலின், கற்பவர் அறிவு கிளர்ந்தெழுந்து பேரறிவாகி அறிவின்பம் பயக்கும்; அறிவையும் சிந்தனையையும் பெருக்குதலால், அவ்வெழுத்துப் பணி, வாழ்க்கை விளக்கத்துக்கும் வகை செய்யும். (யோக நித்திரை நூலின் எடுத்துக் காட்டினால் இது விளங்கும்.)

'இங்ஙனம்' 'ஆனாலும்' 'ஆயினும்' 'ஏனென்றால்' 'ஆதலால்' 'ஆகவே' 'எனவே' 'சுட்டுக்கள்,' 'உருபுகள்' முதலிய எத்தனையோ வகையான இடைச்சொற்கள் தமிழில் இருப்பது இந்நடைக்கு மிகவும் உதவியாயிருக்கும். (தொலைவிலுணர்தல், பக். 221). பெயர், வினை, இடை, உரி என்னும் நால்வகைச் சொற்களில் இடைச் சொற்களால் விளையும் பயன்களில் இதுவும் ஒன்று; இடைச்சொல் இருப்பதைத் தமிழெழுதுவோர் கருத்தூன்றிப் பயன்படுத்தாவிட்டால், நடையிற் சுவை குறையும்.

இடைச் சொற்களைப் பயன்படுத்தாமலே காரண காரிய முறையில் தொடர்ந்தெழுதுதலும் உண்டு; சொற்கள் மிகாமைக்கு இம்முறை ஏற்றதே யாயினும், அது, இயல்பன்று.

**ஆராய்ச்சி நடை :**

ஆராய்ச்சிகள் பெரும்பாலும் காரண காரிய முறைகளை ஒட்டியே நிகழுமாயினும், வெளிப்படையற்ற மறைவான கருத்துக்களை வெளிப்படுத்தி மன்பதையை அவை உய்விக்கின்றன; பொய் மெய்களைப் பிரித்துத் தருகின்றன.

மரபு கொண்ட சொற்களாலேயே கருத்துக்களைக் கூறிக் கொண்டிராமல், அவற்றின் கருத்துகள் இன்னவையென்று வாழ்க்கை விளக்கமாக விளங்க வைத்தலும் இவ் வாராய்ச்சி முறையின் பெரும் பயனாகும். சிவஞானபோத ஆராய்ச்சியில், வித்தைக் கருவிகளுள் ஒன்றான 'கலை' என்னும் பிரிவும் ஆராயப் பட்டிருக்கிறது. 'கலை' என்று சொல்லப்படுங் கருவி எது? வாழ்க்கையில் எப்படித் தெரிகிறது? எப்படிப் பயன்படுகிறது? என்றெல்லாம் அடிகள் விளக்கியிருக்கின்றார் (பக். 67-8). மிகவும் இன்றியமையாத இவ் வாராய்ச்சி போல்வன, கற்பார்க்கு எவ்வளவு உதவியாயிருக்கும், பாருங்கள்! இங்ஙனமே பிறவும்!

ஆய்வு முறையில் ஒன்றிக் கலந்து தமிழை எழுதும் பொழுது, அதற்கேற்ற இயல்பில் நடை மிக அமர்த்தலாக அமைந்து விடுகிறது; நிறைந்து கரைபுரண்டோடும் ஓர் ஆற்று வெள்ளம், ஓடுவதே தெரியாதபடி எவ்வளவு சுழித்தாழ்ந்து நடைபயில்கிறது! "நடவாய் வாழி காவேரி" என்னும் இளங்கோ வடிகளார் வாக்கு எவ்வளவு இயற்கையாய் இருக்கிறது!

'சிவஞானபோத ஆராய்ச்சி' 'திருக்குறள் ஆராய்ச்சி' என் பன, நூல்களின் தலைப்புகளாலேயே ஆராய்ச்சி நிலைகளைப் புலப்படுத்தும்; 'மாணிக்கவாசகர் வரலாறு' என்பதைத் தனி யாகப் பதிப்பித்த நூற்பதிப்புக்கழகத்தார், 'சமயக் கொள்கைகள் ஆராய்ச்சி' என்று ஓர் உள்தலைப்பு இட்டிருப்பதும் இதனை வெளிப்படுத்தும்.

மறுப்பு நடை :

அடிகளார் ஒன்றை மறுக்க முற்பட்டால், தக்க சான்று களின்றி எதுவும் செய்யார்: மறுப்புக்குரியவரும் அதனால் தெளிவு பெறுவர்; உரிய மறுப்பு முறைகளைக் கையாள்வதுடன், உரிய முடிபு வாய்பாடுகளையும் அங்கங்கும் ஏற்றி நடைகூட்டுவார். இடையிடையே விந்தையான பழமொழிகளையும் இணைத்து, மறுப்பவர் செம்மலையும் சிதைத்து விடுவார்; சோமசுந்தரக் காஞ்சியாக்கம் முதலிய மறுப்பு நூல்களில் முழுதும் இவ் வியல்பு களைக் காணலாம்.

எடுத்துக் காட்டாக இங்கே ஒரு தொடர் மட்டும் (பக். 36).

"தலையாய அறிவினர்க்கே விளங்கற்பாலனவாய், ஏனைப் புல்லறிவினார்க்கு விளங்காதிருண்டு கிடப்பனவாய்ப் பொருட் பால் நுண்பொருளெல்லா மறிதற்கு நீர் யார்?"

**முத்தமிழ் நடை :**

அறிவுநிலை (இயற்றமிழ்), உணர்வுநிலை (இசைத்தமிழ்), இவ்விரண்டின் அடிப்படையில் நிகழும் செயல்நிலை (நாடகத் தமிழ்) என்னும் திறத்தில் அடிகளார் எழுத்து முத்தமிழ் நடையாய்ப் பயில்வுறுகின்றது.

“உண்டு என்பதனை விளங்க அறிவித்தற்குரிய அறிவுநிலையும், பின் அதனோடு வேறறக் கலந்து நின்றின்புறுதற்குரிய உணர்வு நிலையு மென்னும் இருதிற நிலையினையும் உயிர்களுக்கு முறுகுவித்துப் பின் அவ்வறிவு நிலையினையுங் கழலச் செய்து தூய அன்புருவாய் விளங்கும் உணர்வுநிலையை நிலைபெருக்குவித்து உயிர்களுக்கு அளந்தறியப்படாத பெரும் பயனைத் தருதற்கு இன்றியமையாக் கருவியாவதுதான் பாட்டென்பது”

(பட்டினப்பாலை ஆராய்ச்சியுரை, பக். ௭.)

மேல் வந்த ‘சோமசுந்தர நாயகர் வரலாற்’றின் எடுத்துக் காட்டினாலும், உரையாடற் செயலின் நாடகத் தமிழ் நிலையை, அது வாழ்க்கை யுண்மையாய் நடைபெற்றதாதலின், இனிது விளக்கும்; ‘அம்பிகாபதி அமராவதி’ முதலிய நாடகநூல் நடையும் இங்கே நினைவுகூரத் தக்கது.

அடிகளார் நூல்கள் அனைத்தும், எழுத்து நடையில் எவ்வளவு சிறப்புடையனவோ அவ்வளவு கருத்து விளக்கத்தாலும், விளக்கும் முறைகளாலும், மாட்சிமை வாய்ந்தவை.

இங்ஙனம் அடிகளாரின் எழுத்து நடை, இனிமையும் அருமையும் இலக்கண இலக்கியத் தருக்கச் சிறப்புகளும், பிறவும் வாய்ந்ததாய் இருப்பதுடன், பலப்பல வாழ்க்கை நலன்களும் அமைந்து, தொல்லாணை நல்லாசிரியரின் அழகு நடை போலவே சுவை மிகுந்து செல்கின்றது.

---

## வாய்மை காத்த மறைமலை

[புலவர் பண்ணை சண்முகம்]

வாழ்வியல் அறிந்த மேதை;
மனத்தினில் பட்ட உண்மை
தாழ்வுயர் வெண்ணம் இன்றிச்
சாற்றிய மேன்மை யாளன்;
மாழ்குறும் மனித மேனி
மறையினும் மறையா சீர்த்தி
வாழ்வினைப் பெற்ற மன்னன்
மறைமலை அடிகள் அன்றோ?

# உயிர்மெய்ம் முதல் வேர்ச்சொற்கள்

[ஞா. தேவநேயன்]

முல்[4]—பொருந்தற் கருத்து வேர்ச்சொல் (தொடர்ச்சி)

மருமம் = 1. தழுவும் மார்பு. 2. நெஞ்சு. 3. முலை.

மருமம்—மம்மம்—அம்மம் = 1. முலை. 2. முலைப்பால். "அம்ம முண்ணத் துயிலெழாயே" (திவ். பெரியாழ். 2 : 2 : 1). 3. குழந்தையுணவு (குழந்தை வளர்ப்புச் சொல்).

ம. அம்மிஞ்ஞி, க. அம்மி.

ஒ. நோ : கருமம்—கம்மம்—கம் = செய்கை, தொழில், உழவு, கொல். இந். காம் = வேலை. பெருமான்—பெம்மான்.

மம்மம்—*L. Mamma*, *E. mamma*, milk-secreting organ of female in mammals.

*E. mammal*, one of animals having mammale (pl.) for nourishment of young.

E. *mamilla* (*L.* dim. of MAMMA), nipple of female breast.

மருமம்—வ. மர்மன்.

வ. ம்ரு—மர் = சா (to die). மர்மன் = mortal spot, vulnerable point, any vital member or organ என்பது வடமொழியாளர் கூறும் பொருட்கரணியம். இதன் பொருத்தத்தை அறிஞர் கண்டு கொள்க.

மருளல் = மயங்கல், வியத்தல்.

ஒ. நோ : *E* marvel, *ME.* f. *OF.* mervveille f. *LL. mirabilia.* neut. pl. of *L. mirablis* (*mirari*, wonder at).

*E.* mirror (looking—glass) f. *ME*, f *OF.* f. *Rom. mirare*, look at, f. *L. mirari*, wonder at.

மேலையர் முதன்முதல் முகக் கண்ணுடியைக் கண்டதும் வியந்ததாகத் தெரிகின்றது. அங்ஙனமே ஏனை நாட்டாரும் வியந்திருத்தல் வேண்டும்.

முல்—முள்—முள்கு. முள்குதல் = முயங்குதல்.

"இளமுலை முகிழ்செய் முள்கிய" (கலித். 125).

முள்—முளி = 1. உடல் மூட்டு. "திகழ் முச்சாணென்பு முளியற" (தத்துவப். 133). 2. மரக்கணு. (யாழ். அக.) 3. கணுக்கால். (W.)

முளி—முழி = எலும்புப் பூட்டு, மூட்டு.

ம : முளி, க : முடி.

முழி—மொழி = 1. முழங்கை முழங்கால் முதலியவற்றின் பொருத்து. மொழி பிசகிவிட்டது (உ. வ.). 2. மரஞ்செடி கொடிகளின் கணு. "மொழியு மினியீர்.........மதுரக் கழை காள்" (அழகர்கல. 67). 3. கரும்பின் இருகணுவிற் கிடைப் பட்ட பகுதி. 4. கரும்பின் மொழிபோற் சொற்றொடர்க் குறுப் பான சொல்.

"ஒரெழுத் தொருமொழி ஈரெழுத் தொருமொழி
இரண்டிறந் திசைக்குந் தொடர்மொழி யுளப்பட
மூன்றே மொழிநிலை தோன்றிய நெறியே."

(தொல். மொழி. 12)

5. சொற்றொடரான பேச்சு (Articulate speech of. articulate = connected by joints.) "மொழிபெயர் தேஎத்த ராயினும்"

முழி—முழம் = கைந்நடுப் பொருத்தினின்று அதன் நுனி வரையுள்ள நீட்டலளவு. "உண்பது நாழி யுடுப்பது நான்கு முழம்" (நல்வழி. 28).

முழங்கை (முழம் + கை) = நடுப் பொருத்தினின்று நுனி வரைப்பட்ட அல்லது முழ அளவான கை.

முழம் போடுதல் = 1. முழங்கையால் அளத்தல். 2. ஆளின் தன்மையை ஆய்ந்து மதிப்பிடுதல்.

முழங்கால் (முழம் + கால்) = நடுப் பொருத்தினின்று அடி வரைப்பட்ட அல்லது முழ அளவான கால்.

முழந்தாள் (முழம் + தாள்)—முழந்து = முழங்கால் (சூடா.)

ம. முழம். து. முழம், க. மொழ, தெ. முர.

முள்—முழு—முழுவு. முழுவுதல் = 1. பொருந்தித் தொடு தல். 2. முத்தமிடுதல். "வந்தென் முலை முழுவித் தழுவி" (திருக்கோ. 227). 3. தழுவுதல்.

முழுவு - முழுவல் = விடாது தொடர்ந்த அன்பு. "முழுவற் கடல் பெருத்தான்" (தணிகைப்பு. நந்தியு. 6.)

முழுவல்—உழுவல் = அன்பு. "பழுத்த வுழுவலமரர்" (விநாயகபு. 72 : 54).

உழுவலன்பு = எழுமையுந் தொடர்ந்த அன்பு. (தொல். கள. 34, உரை).

முழுவு—முழுசு, முழுசுதல் = 1. முட்டுதல். "பிள்ளைகள் முலைக்கீழ் முழுசினவாறே பால் சுரக்கும்." (ஈடு, 5 : 3 : 3).

2. முத்துதல். "அழுந்தத் தழுவாதே முழுசாதே" (திவ். பெருமாள். 9 : 6).

ஒ. நோ : பரவு—பரசு, விரவு—விரசு.

முழுவல்—முழால்=தழுவுகை. "சிருர் முலை முழாலிற் பில்கி" (சீவக. 2541).

முழுவு—முழவு. முழவுதல்=நெருங்கிப் பழகுதல். (இ. வ.)

முழவு—முழாவு. முழாவுதல்=நெருங்கிப் பழகுதல் (இ.வ)

முழுத்தல்=திரளுதல், பருத்தல், முழுத்த ஆண்பிள்ளை. (உ. வ.)

முழு ஆள்—முழாள்=வளர்ச்சியடைந்த பெரிய ஆள். முழு—முழா=1. திரண்ட முரசு. (பிங்.) 2. குடமுழா. (சிலப். 141, உரை).

முழா—முழவு=1. முரசு. "முழவின் முழக்கீண்டிய" (சீவக. 2399). 2. குடமுழா. (பிங்.) 3. தம்பட்டம். (பிங்.) ம. முழாவு.

முழவுக்கனி=திரண்ட பலாப்பழம். (சங். அக.)

முழவு—முழவம்=1. பெருமுரசு. "மண்கனை முழவம் விம்ம" (சீவக. 628). 2. குடமுழா. "தண்ணுமைப்பின் வழி நின்றது முழவே" (சிலப். 3 : 141).

ஒ. நோ : முரசு—முரசம். 'அம்' பெருமைப் பொருட் பின்னொட்டு.

முழா—முழ—முழங்கு. முழங்குதல்=1. பெரிதொலித்தல். "எழிலி முழங்குந் திசையெல்லாம்" (நாலடி. 392). 2. பலரு மறியச் சாற்றுதல். "தொல்காப்பியந்திரு வள்ளுவர் கோவை யார் மூன்றினு முழங்கும்" (இலக். கொத். 7). முழங்கு—முழக்கு—முழக்கம்.

முழா — முழாசு. முழாசுதல் = பெருநாவிட்டு எரிதல். (யாழ்ப்.)

முழாசு=பெருந்தீநா. (யாழ்ப்).

முழு=(கு. பெ. எ.) 1. பருத்த. "முழுமுத லொருலைந்த கோளியாலத்து" (புறநா. 58). 2. மிகுந்த, மொத்த, நிறை வான, எல்லா. எ.டு. முழுமூடன், முழுத்தொகை, முழுமதி, முழுவலகாளி (இறைவன்).

முழுக்க (கு. வி. எ.)=முழுதும். "உயிரை முழுக்கச் சுடு தலின்" (சீவக. 1966, உரை).

முழுத்த=முதிர்ச்சிபெற்ற. "முழுத்த வின்பக் கடல்" (திருக்கரு. கலித். அந்)

முழு—முழுது=எல்லாம், எஞ்சாமை. "முழுதென் கிளவி யெஞ்சாப் பொருட்டே" (தொல். உரி. 28.)

முழுது—முழுசு. எல்லாப் பணியாரத்தையும் முழுசு முழு சாய்த் தின்றுவிட்டான். (உ. வ )

முழுது—முழுந்து=முழுமை. "முழுந்து சுகவடிவாம்" (ஞானவா. சனக. 14.)

முழு—முழுமன்=1. முழுது. 2. அரைக்கும்போது சிதை யாது விழும் முழுக் கூலமணி.

முழுமன்—முழுவன்=முழுது. கடன் முழுவனும் தீர்த்து விட்டான். (உ. வ.)

முழு—முழுமை=1. பருமை. "துங்கமுழு வுடற்சம ணச் சூழ்ந்து மகிழ்வார்" (பெரியபு. திருநாவு. 39.) 2. எல் லாம். (பிங்.)

முழுவது—முழுது—முழுதோன்=கடவுள். "முழுதோன் காண்க" (திருவாச. 3 : 29.)

முழா—மிழா=பருத்த ஆண்மான் (Stag=male of red deer or of other large kinds of deer—C. O. D.)

மிழா—மேழம்=செம்மறியாட்டுக் கடா.

மேழம்—மேடம்=1. செம்மறியாட்டுக் கடா. (பிங்.) 2. மேடவோரை. (பிங்.) 3. மேடமதி. (சித்திரை.) "மேட மாமதி" (கம்பரா. திருவவதா. 110.)

மேடம்—வ. மேஷ.

மேழம்—மேழகம்=செம்மறியாட்டுக் கடா. "வெம்பரி மேழக மேற்றி" (சீவக. 521.)

மேழகம்—ஏழகம்=செம்மறியாட்டுக் கடா. ஏழகம்—பிரா. ஏளக.

ஒ. நோ : *E. elk*, large animal of the deer kind found in N. Europe and N. America. *ME elke, OE. elh, eolh.*

மேழகம்—மேடகம்=1. செம்மறியாட்டுக்கடா. 2. மேட வோரை.

மேடகம்—வ. மேடக.

ஏழகம்—ஏடகம்—ஏடு—யாடு=செம்மறியாடு, வெள்ளாடு, ஆடு. "யாடுங் குதிரையும்" (தொல். மர. 12 )

*"ஒன்றிடை யார வுறினுங் குளகு*
*சென்றுசென் றருந்தல் யாட்டின் சீரே"*

என்னும் பழம் பொதுப் பாயிரச் செய்யுள், வெள்ளாட்டைக் குறித்தது.

யாடு—ஆடு=1. ஆட்டுப்பொது. 2. மேடவோரை. "திண்ணிலை மருப்பி னடுதலை யாக" (நெடுநல். 160.)

ம. ஆடு, க. ஆடு, து. ஏடு. ஒ. நோ : ஏது—யாது, ஏவர்—யாவர்—யார்—ஆர். மானும் ஆடும் நெருங்கிய இனமா யிருத்தல் கவனிக்கத்தக்கது.

ஆடு என்னுஞ்சொல், இற்றை நிலையில் இருவகை யாட்டிற்கும் பொதுவேனும், முதற்காலத்தில் செம்மறியாட்டையே சிறப்பாகக் குறித்தது.

முழா—முடா—மிடா=பெருமண் பானை. "சோறு செப்பி னாயிரம் மிடா" (சீவக. 692.) 2. பானை. (பிங்.)

மிடாத்தவளை=பெருந்தவளை. (M. M. 90) முழு—மொழு — மொழுக்கு — மொழுக்கன் = தடித்தவன். (யாழ். அக.)

மொழுக்கு — மொழுக்கட்டை = தடித்த — வன் — வள். (இ. வ.)

மொழு—மொழுப்பு—சேலை செறிந்த பைதிரம் (பிரதேசம்) மொழு—மொழியன்=பெரும் பேன். (யாழ். அக.) மொழு—மொகு—மொக்கு=1. மரக்கணு. (யாழ். அக.) 2. பருமன். மொக்கு—மொக்கன். தடித்த—வன்—வள்—து. (இ. வ.)

மொக்கன்—மொங்கன்=தடித்த—வன்—வள்—து. மொங்கன்—மொங்கான்=பருத்துக் கனத்த பொருள். (உ. வ.)

மொங்கான் தவளை=பருத்த பச்சைத்தவளை. மொக்கு—மொக்கை=1. பருமன். 2. கூரின்மை. எழுதுகோல் மொக்கையாகி விட்டது. (உ. வ.) 3. புணர்ச்சி. மொக்கை போடுதல்=புணர்தல்.

மொக்கைச்சோளம்=பருத்த அமெரிக்கச் சோளம். மொக்கைச் சோளம்—மக்கைச் சோளம்—மக்காச்சோளம். மொக்கையாளி—மக்கையாளி—மக்காளி=மிகப் பருத்தவன். (உ. வ.)

மொக்கை — மொக்கட்டை=மழுக்கமானது. (இ. வ.) முல்—முது—முத்து. முத்துதல்=1. சேர்தல். "திருமுத்தாரம்" (சீவக. 504). 2. ஒன்றையொன்று தொடுதல். 3. அன்பிற்கறிகுறியாக இருவர் முகங்கள் அல்லது உதடுகள் பொருந்தித் தொடுதல். "புதல்வர் பூங்கண் முத்தி" (புற. நா. 41.) முத்து—முத்தம். 4. திரளுதல்.

முத்தங்கொள்ளுதல்=1. தொடுதல், பொருந்துதல். "சிலை முத்தங்கொள்ளுந் திண்டோள்" (சீவக. 2312.) 2.

புல்லுதல், தழுவுதல், ''முலை முத்தங் கொள்ள'' (சீவக. 2312.) 3. முத்தமிடுதல். ''தாய்வாய் முத்தங் கொள்ள'' (பெரியபு. கண்ணப்ப. 23.)

முத்து—முத்தி=முத்தம் (Kiss). ''மணிவாயில் முத்தி தரவேணும்'' (திருப்பு. 183.)

முத்து=1. ஆமணக்கு, வேம்பு, புளி முதலியவற்றின் உருண்டு திரண்ட விதை, ''முத்திருக்குங் கொம்பசைக்கும்'' (தனிப்பா. 1 : 3 : 2.) 2. நெய்யுள்ள விதை. 3. உருண்டு திரண்ட கிளிஞ்சில் வெண்மணி. ''முல்லை முகைமுறுவல் முத் தென்று'' (நாலடி. 45) 4. கிளிஞ்சில் முத்துப்போன்ற மாதுளை விதை. 5. வெண்மணி போன்ற கண்ணீர்த் துளி. ''பருமுத் துறையும்'' (சீவக. 1518.) 6. வெண் முத்துப் போன்ற வெள்ளரிசி. 7. ஆட்டக் காய்களாகப் பயன்படும் புளிய முத்து. 8. ⅞ பணவெடை கொண்டதோர் பொன்னிறை. 9. வெண் முத்துப்போன்ற அம்மைக் கொப்புளம். பிள்ளைக்கு உடம்பு முழுதும் முத்துப் போட்டிருக்கிறது. (உ. வ.) 10. வெண் முத்துப்போற் சிறந்த பொருள் அல்லது தன்மை. ''முதல் விலை முத்து விலை'' (பழ.)

முத்து—முத்தம்=பருமுத்து. ''சீர்மிகு முத்தந் தைஇய'' (பதிற்றுப். 39) 2. பேராமணக்குக் கொட்டை. 3. பச்சைக்கற் குற்றங்களுளொன்று. (திருவிளை. மாணிக்கம். 67.)

'அம்' பெருமைப் பொருட் பின்னொட்டு. ஒ. நோ: விளக்கு—விளக்கம், மதி—மதியம், நிலை—நிலையம்.

முத்தம்—வ. முக்த.

முத்து—முத்தை=1. திரட்சி. (சூடா.) 2. சோற் றுருண்டை. (W.) தெ. முத்த (Mudda) குறுமுத்தம் பழம்= மிதுக்கம் பழம்.

மொலு—மொது. மொது மொது வெனல்=திரளுதற் குறிப்பு. மொது மொதுவென்று மக்கள் (சனங்கள்) குவிந் தார்கள். (உ. வ.) 2. கொழுத்து வளர்தற் குறிப்பு.

மொது மொதுவெனல்—மொதுமெதெனல்.

மொது—மொத்து. மொத்துதல்=1. உரக்க அல்லது வலுக்க அடித்தல். எல்லாருஞ் சேர்ந்து நன்றாய் மொத்தி விட்டார்கள். (உ. வ.) ''எதிர்மொத்தி நின்று'' (கம்பரா. முதற்போ. 66.)

தெ. மொத்து, க. மோது, து. முத்தெ. மொத்து= வலுத்த அடி. ''மோது திரையான் மொத்துண்டு'' (சிலப். 7. பாடல் 7.)

2. வீங்குதல், அவனுக்கு முகம் மொத்தியிருக்கிறது. (உ. வ.)

மொத்து—மொத்தி=புடைப்பு. (யாழ்ப்.)

மொத்து=1. தடித்த—வன்—வள்—து. 2. சுறு சுறுப்பில்லாத—வன்—வள்—து. 3. மூடத்தனமுள்ள—வன்—வள்—து. தெ. மொத்து (Moddu), க. மொத்த (Modda).

மொத்துப் பிண்டம்=மொத்து 1, 2, 3. மொத்துக் கட்டை மொத்து 1, 2, 3.

மொத்தன்=(ஆ. பா.) 1. தடித்தவன். 2. சோம்பேறி. 3. மூடன். மொத்தன்—(பெ. பா.) மொத்தி, மொத்தை.

க. மொத்தி (moddi).

மொத்து—மொத்திகை—மத்திகை=குதிரையை அடிக்கும் சமட்டி. "மத்திகை வளைஇய மறிந்து வீங்கு செறிவுடை" (முல்லைப். 59). 2. தடிக்கம்பு, கழி. "வேயின் மத்திகையர்" (அரிசமய. குலசே. 54).

*GK.* mastix, mastigos=குதிரைச் சமட்டி.

ஒ—அ. சொல்லாக்கத் திரிபு. ஒ. நோ: கொம்பு—கம்பு, ஒட்டு — அட்டு, தொண்டையார்பேட்டை — தண்டையார் பேட்டை.

மொத்து—மொத்தம்=1. பருமன். (W) திண்ணம், கட்டிற்கால் மொத்தமாயிருத்தல் வேண்டும். (உ. வ.) எலுமிச்சம்பழத்தோல் மொத்தமாயிருத்தல் கூடாது. 2. கூட்டுத்தொகை. தேர்வு எழுதினவர் எல்லாரும் மொத்தம் எத்தனை பேர்? (உ. வ.) 3. முழுமை. எல்லாக் காய்களையும் மொத்தமாய் விலை பேசி வாங்கிக்கொள். (உ. வ.) வரவுசெலவுக் கணக்குப் பார்த்தால் மொத்தத்தில் இழப்பிராது. 4. பொது. எல்லாரையும் மொத்தமாய்த் திட்டி விட்டான். (உ. வ) 5. பெரும்பான்மை. மொத்த விலை வணிகர். (உ. வ.)

மொத்து—மொத்தளம் = (யாழ். அக.) 1. மொத்தம். 2. கூட்டம்.

மொத்தளம்—மத்தளம் = இருந்தடிக்கும் பெருமதங்கம் (மிருதங்கம்) அல்லது இருதலை முழா.

மொத்து—மொத்தை=1. பருமன். (யாழ். அக.) 2. உருண்டை, சோற்றுருண்டை.

தெ. முத்த (mudda), க. முத்தெ (mudde) மொத்தையுரு—நெட்டுரு. மொத்தையுருப் போட்டுத் தேறிவிட்டான். (உ. வ.)

மொத்தை—மொச்சை = தமிழ்நாட்டுப் பயற்று வகைகளுள் மிக மொத்தமானது; வீட்டவரைக்கு இனமான காட்டவரை.

மொத்தை — மோத்தை = 1. செம்மறியாட்டுக் கடா. "மோத்தையுந் தகரும் உதரும் அப்பரும்" (தொல். மர. 2). 2. மேழ வோரை. (சூடா. உள். 9) 3. வாழை தாழை முதலியவற்றின் மடல் விரியாத பூ. "நெடலை வக்கா முதலாயின...... தாழம்பூ மோத்தைபோ விருப்பன" (நற். 211, உரை).

க. மோத்து.

மொத்து—மொந்து—மொந்தன் = பெருவாழை; கதலிக்கு எதிரானது.

தெ. பொந்த (bonta),

மொந்து—மொந்தணி = 1. மரத்தின் கணு. (யாழ்ப்.) 2. மூடப்பெண். (யாழ். அக.)

மொந்தணி—மொந்தணியன் = 1. பருத்தது. 2. உருண்டு திரண்டது.

மொத்தை — மொந்தை = 1. பருத்தது. 2. சோற்றுருண்டை.

மொத்தையுரு—மொந்தையுரு.

மொத்து—மத்து = 1. பருப்பு கீரை முதலியன கடையுங் கருவி. 2. தயிர் கடையுங் கருவி. "ஆயர்மத்தெறிதயிரி னுயினுர்" (சீவக. 421.)

மத்து—வ. மந்த (mantha)

கடைகருவி அடியில் மொத்தமாயிருப்பதனுல் மத்தெனப்பட்டது.

மத்து—மத்தி. மத்தித்தல் = மத்தினுற்கடைதல். "பாற்சமுத்திரத்தை மத்தித்த திருமால்" (கூர்மபு.)

மத்தி—வ. மத் (math).

மத்தி—மதி. மதித்தல் = 1. கடைதல். "மந்தரங்கொடு மதித்தநாள்" (சேதுபு. சங்கர. 20). 2. மத்தினுற் கடைந்தாற்போல் கையினுல் அல்லது கைவிரலால் அழுத்திக் களிப்பதமாக்கல். குழந்தைக்குச் சோற்றை நன்ருய் மதித்து ஊட்டு. (உ. வ.)

மதி—மசி. மசிதல் = களிப்பதமாகக் கடைபடுதல் அல்லது குழைதல், சோறு நன்ருய் வேகாததனுல் மசியவில்லை. (உ. வ.) 2. பிறர் விருப்பிற்கு இணங்குதல். ஆள் எளிதில் மசிய மாட்டான். (உ. வ.)

மசி—வ. மஷ்.

மசித்தல்=1. கடைந்து அல்லது பிசைந்து குழையச் செய்தல். 2. மைக்கட்டியை அல்லது களிம்பை நீரிற் குழைத்து எழுதுமை யுருவாக்குதல். "மசித்து மையை விள்ள வெழுதி" (பதினொ. திருவாலங். மூத். 2).

மசி=எழுதுமை. "மசிகலந் தெழுதப்பட்ட" (சூளா. தூது. 83). 2. வண்டி மசகு.

மசி—வ. மஷி.

மசி—மசகு=வைக்கோற் கரியோடு விளக்கெண்ணெய் கலந்து வண்டி யச்சிற்கிடும் மை.

தெ. மசக (masaka).

மசிக்குப்பி=மசிக்கூடு.

மசி—மயி—மை=1. வண்டி மசகு. 2. கண்ணிற்கிடும் கரிய களிம்பு (அஞ்சனம்). "மைப்படிந்த கண்ணாளும்" (தேவா. 1235 : 10.) 3. எழுதும் அல்லது ஏட்டிற் பூசும் கரிக் குழம்பு. 4. மந்திர வினையிற் கையாளுங் கரும் பசை. 5 மையின் கரு நிறம். "மறவர் மைபடு திண்டோள்" (அகநா. 89.) "மைம் மீன் புகையினும்" (புறநா. 117.) 6. இருள். "மைபடு மருங்குல்" (புறநா. 50.) 7. இருண்ட பசுமை. "மையிருங் கானம்" (அகநா. 43.) 8. கருமுகில். "சேயோன் மேய மைவரை யுலகமும்" (தொல். அகத். 5.) 9. கரிய ஆடு (வெள்ளாடு) "மையூன் மொசித்த வொக்கலொடு" (புறநா. 96), "வாயின் மாடந்தொறும் மைவிடை வீழ்ப்ப" (புறநா. 33.) 10. கரிய எருமை. "வைகுபுலர் விடியன் மைபுலம் பரப்ப" (அகநா. 41.) 11. கருமைக்கு இனமான நீலநிற விண். (அரு. நி.) 12 கரிய களங்கம். "மைதீர்ந்தன்று மதியுமன்று" (கலித். 55) 13. அழுக்கு. "மையில் செந்துகிர் (கலித். 85.) 14. குற்றம். "மையி லறிவினர்" புறநா. 22 : 8.) 15. கரிசு (பாவம்), தீவினை. "மைதீர்த்தல்" (சினேந். 457.) 16. கரு முகில் நீர். (யாழ். அக.) அல்லது நீலக்கடல்நீர்.

மை—மைஞ்சு=கருமுகில், முகில். (நன். 122. மயிலை.) மைஞ்சு—மஞ்சு=1. முகில். "யாக்கை மலையாடு மஞ்சுபோற் றோன்றி" (நாலடி. 28.) 2. வெண்முகில். "மஞ்செனை நின்றுலவும்" (சீவக. 2853.) 3. பனி. (பிங்.) 4. மூடுபனி. (இ. வ.)

ஒ. நோ : ஐ—ஐந்து—அஞ்சு.

மைத்தல்=1. கருத்தல் "மைத்திருள் கூர்ந்த" (மணி. 12 : 85.) 2. ஒளி மழுங்குதல். "மைத்துன நீண்ட வாட்டடங் கண்ணர்" (சீவக. 2333.)

மை—மைப்பு=கருப்பு. "மைப்புறுத்த கண் ணரம்பை மார்" (காஞ்சிப்பு. அரிசாப. 2.)

மைக்கூடு (கூண்டு)=1. எழுதும் மைப்புட்டி. 2. கண் மைச் சிமிழ்.

முத்து—முட்டு. முட்டுதல்=1. எதிர்ப்படுதல் "வரையா நாளிடை வந்தோன் முட்டினும்" (தொல். களா. 21.) 2. எதிர்த் தல். 3. மோதுதல். "துள்ளித்தூண் முட்டுமாங் கீழ்" (நாலடி. 64.) விலங்குகள் கொம்பால் தாக்குதல், வாயில்நிலையால் தலை தாக்குண்ணுதல். 4. பொருதல். "குலப்பகைஞன் முட்டினுன்" (கம்பரா. நட்புக் 50.) 5. பொருந்தித்தொடுதல். 6. தாங்கு தல். 7. பிடித்தல். "குழலாள்......கையினைக் கையாலவன் முட்டிடலும்" (உத்தரரா. திக்குவி. 16.) 8. முடிதல். "முட்டடி யின்றிக் குறைவுசீர்த் தாகியும்" (தொல். செய். 122.) 9. நிறை தல். "தோய முட்டிய தோடவிழ் மலர்த்தடம்" (காஞ்சிப்பு. கழுவாய். 79 ) 10. தடுத்தல். 11. தடைப்படுதல். "வெண் ணெல்லி னரிசி முட்டாது பெறுகுவீர்" (மலைபடு. 564.) 12. குன்றுதல். "முட்டா லின்பத்து முடிவுல கெய்தினர்" (சிலப். 15 : 197.) 13. இடர்ப்படுதல். 14. தீட்டுப்படுதல். 15. தேடுதல்.

> "நாடிநாங் கொணருது நளினத் தாளைவான்
> மூடிய வுலகினை முற்று முட்டியென்று" கம்பரா. சம்பாதி. 7.

ம. முட்டுக, க. முட்டு.

முட்டு=1. முழங்கை முழங்கால் விரல்கள் ஆகியவற்றின் பொருத்து. 2. குவியல். பண்டங்கள் முட்டு முட்டாய்க் கிடக் கின்றன. (உ. வ.) 3. பற்றுக்கோடு. விலங்குகள் கொம்பால் தாக்குகை. 4. தடை. "முட்டுவயிற் கழறல்." (தொல். மெய்ப். 23.) 5. முட்டுப்பாடு. 6. கடத்தலருமை. "முட்டுடை முடுககரும்" (சீவக. 1216. 7. குறைவு. "மூவேழ் துறையு முட்டின்று போகிய" (புறநா. 166.) 8. கண்டுமுட்டு கேட்டு முட்டு முதலிய தீட்டுக்கள். (பெரியபு. திருஞான. 692) 9. மாதவிடாய். (W.)

(தொடரும்)

———

# சங்க நூல்களில் மீன்கள்

[பி. எல். சாமி, பி.எஸ்ஸி.]

(பரல்-கூ, ௫௦௨ஆம் பக்கத் தொடர்ச்சி)

16. இரு

சங்க நூல்களில் இருவை மீன் என்று எங்கும் கூறவில்லை. இருப்பினும் இதை மீன் என்று வழங்குவது தமிழ் மரபாகும். ஆனால், இரு மீன்இனத்தைச் சேர்ந்ததன்று. நண்டு இனத்துடன் நெருங்கிய உறவு உடையது. சங்க நூல்களில் இருவைப் பற்றிப் பல பாடல்கள் வருகின்றன. இருவைத் தமிழர் மிகவும் விரும்பி உண்டதால் பல பாடல்களில் இரு கூறப்பட்டதாகக் கருதலாம். சங்க நூல்களில் சேயிரு என்றும், பெருஞ் சேய்இரு என்றும், வெள்ளிரு என்றும், பச்சிரு என்றும் கூறப்பட்டுள்ளன. நன்னீரில் வாழும் இருவும் சங்க நூல்களில் கூறப்பட்டுள்ளது. இதைத் தற்காலத்தில் மோட்டிருல் என்று அழைப்பர். மலையாளத்தில் இருவைச் செம்மீன் என்றும் பூவாலன் என்றும் அழைப்பர். சேயிரு என்ற பெயரானது சங்க காலத்தில் சிவப்பு நிறமுடைய இருவினங்களுக்கு வழங்கியது. ஆனால், மலையாளத்தில் சிவந்த இருவைக் குறிக்க வழங்கிய செம்மீன் என்ற பெயர் பொதுவாக இருவினத்தைக் குறிக்கும் பெயராக மாறிவிட்டது. பூ என்றாலும் சிவப்பு என்று மலையாளத்தில் பொருள்.

"மாயிரும் பரப்பகந் துணிய நோக்கிச்
சேயிரு வெறிந்த சிறுவெண் காக்கை
பாயிரும் பனிக்கழி துழைஇப் பைங்கால்" —நற்றிணை, 31

"கழிச்சேறு ஆடிய கணைக்கால் அத்திரி
குளம்பினுஞ் சேயிரு ஒடுங்கின" —நற்றிணை, 278

"இனமீன் வேட்டுவர் ஞாழலொடு மிலையு
மெல்லம் புலம்ப நெகிழ்ந்த தோளே
சேயிருத் துழந்த நுரைபிதிர்ப் படுதிரை" —அகம், 270

"இருங்கழிச் சேயிறு வினப்புள் ளாரும்
கொற்கைக் கோமான் கொற்கையம் பெருந்துறை"
—ஐங்குறுநூறு, 188

"தெண்கழிச் சேயிருப் படூஉம்
தண்கடற் சேர்ப்ப வரைந்தனை கொண்மோ"
—ஐங்குறுநூறு, 196

"பெருஞ்சேய் இறவின் துய்த்தலை முடங்கல்
சிறுவெண் காக்கை நாளிரை பெறூஉம்." —நற்றிணை 358

சேயிருவைக் கடலிலும் கழிகளிலேயும் சங்க நூல்கள் கூறியுள்ளன. இருங்கழிச் சேயிரு, தெண்கழிச் சேயிரு என்று கூறப்பட்டிருப்பதைக் காணலாம். மீன் வேட்டுவரான பரதவர் சேயிருவைப் பிடிக்கக் கடல்நீரில் சென்றதைப் பற்றியும் கூறப்பட்டுள்ளது. சேயிரு என்பது Metapaneus Spp, Parapenaeus Spp என்ற இரு இனங்களைச் சேர்ந்ததாகும். இந்த இருவினம் கடலிலிருந்து கழியிலும் ஆற்றுக் கழிமுகத்திலும் செல்லும். ஆதலின் அங்கு நிறையப் பிடிபடுகின்றன. நற்றிணையில் மட்டும் ஒரு பாடலில் பெருஞ்சேய் இறவு கூறப்பட்டுள்ளது. பெருஞ்சேய் இறவு என்பது பெரிய சிவந்த இருவைக் குறிப்பதாகும். இறவினத்தில் பெரியது Paneus Carinatus என்றழைக்கப்படும். சிவந்த இருவினம் மிகுதியாகக் கேரளக் கடற்கரையில் கிடைக்கின்றது. சங்கப் பாடல்களில் குட்டுவனின் கழுமலத்தில் சேயிரு கூறப்பட்டிருப்பதைக் காணலாம். கொற்கையம் பெருந்துறையிலும் சேயிரு கூறப்பட்டுள்ளது. கிழக்குக் கடற்கரையிலும் சேயிரு அகப்படுகின்றது. அகநானூற்றில் வெள்ளிரு கூறப்பட்டுள்ளது.

"சினங்கெழு தானைத் தித்தன் வெளிய
னிரங்குநீர்ப் பரப்பிற் கானலம் பெருந்துறைத்
தனந்தரு நன்கலஞ் சிதையத் தாக்குஞ்
சிறுவெள் ளிறவின் குப்பை யன்ன
வுறுபகை தரூஉம் மொய்ம்மூசு பிண்டன்" —அகம், 152

"கடற்சிறு காக்கை காமர் பெடையொடு
கோட்டுமீன் வழங்கும் வேட்டமடி பரப்பின்
வெள்ளிருக் கனவு நள்ளென் யாமத்து" —அகம், 170

தித்தனுடைய கானலந்துறையில் சிறுவெள்ளிறவின் குப்பை இருந்ததை அகநானூறு கூறியுள்ளது. கடற்காக்கை கோட்டு மீன் வழங்கும் கடற்பரப்பிலிருக்கும் வெள்ளிருவுக்காகக் கனவு கண்டதாக அகநானூறு கூறியுள்ளது. கொம்பன்சுறுவும் பிற சுறுமீன்களும் இருவை மிகுதியாகத் தின்று வாழும். கோட்டுமீன் கடற்பரப்பில் வழங்குவது இருமீனைத் தின்னவேயாகும். சிறிய வெள்ளை நிற இரு தமிழ்நாட்டுக் கடற்கரையில் நிறையக் கிடைக்கின்றது. மேலே கூறிய இருவினங்களில் ஒருவகை வெள்ளை நிறத்துடன் காணப்படுகின்றது. இருக்கள் பெருங் கூட்டமாகக் கடலில் செல்லும். இதை அறிந்தே 'இறவின் குப்பை' என்று அழைத்தனர். இரு ஒரு விரல் அளவு இருக்கும்போது கடலிலிருந்து ஆற்றுத் துறையிலும் கழிகளி

லும் புகுந்து அங்கு வளரும். அவ்வாறு வளரும்போது சிறிது பச்சை நிறமாகக் காணப்படும். வெள்ளிரு என்று சங்க நூல்களில் கூறப்பட்ட இரு Penalus இனத்தைச் சேர்ந்ததாகும். இதை வெள்ளச் செம்மீன் என்று மலையாளத்தில் தற்காலம் அழைக்கின்றனர். இதுவே சங்க நூல்களில் கூறப்பட்ட வெள்ளிருவாகும்.

> "செவ்வரிக் கயலொடு பச்சிருப் பிறழு
> மையிருங் குட்டத்து மகவொடு வழங்கிக்"
> —பெரும்பாணாற்றுப்படை, 270—271

பெரும்பாணாற்றுப்படையில், பச்சிருப் பிறழும் கருமையான கழி என்று கூறியுள்ளதைக் கவனிக்க வேண்டும். சங்க நூல்களில் நன்னீர் இருவும் கூறப்பட்டுள்ளது. இதை மோட்டிருல் என்று இக்காலத்தில் அழைப்பர்.

> "ஆர லீன்ற வையவி முட்டை
> கூர்நல் லிறவின் பிள்ளையொடு பெறூஉம்
> தண்பணைக் கிழவனிவ டந்தையும் வேந்தரும்" —புறம், 342

> "நறவுண் மண்டை நுடக்கலி னிறவுக்கலித்துப்
> பூட்டறு வில்லிற் கூட்டுமுதற் றெறிக்கும்
> பழனப் பொய்கை யடைகரைப் பிரம்பின்" —அகம், 96

> "வண்டோட்டு நெல்லின் வாங்குபீள் விரியத்
> துய்த்தலை முடங்கிருத் தெறிக்கும் பொற்புடை." —அகம் 376

தண்பணையிலும் பழனப்பொய்கையிலும் நெல் வயலிலும் காணப்பட்டதாகச் சொல்லப்பட்ட இரு நன்னீர் இருவாகவே இருக்க முடியும். இதை மோட்டிருல் என்று இக்காலத்தில் அழைப்பர். சிந்தாமணியில் "மோட்டிரு" என்ற பெயர் வருகின்றது. மோட்டிரு அகழியில் இருந்ததாகச் சிந்தாமணிப் பாடல் (95) குறிப்பிட்டுள்ளது. மோட்டிரு நன்னீரிலும் கழிகளிலும் காணப்படும். கடலிரு போன்று இது சுவையாக இராது. தலைதான் பெரிதாக இருக்கும். இந்த இரு நன்றாகக் குதிக்கக்கூடியது. பூட்டறுந்த வில்போல இந்த இரு பொய்கையிலிருந்து தெறித்ததாக அகநானூறு கூறியுள்ளது. இதன் தலையில் கூரிய முள்போலச் செதிள் இருப்பதால் 'கூர்நல்லிறவு' என்று புறநானூறு கூறியுள்ளது. மோட்டிருல் Pelgonnor Spp என்ற இனத்தைச் சேர்ந்ததாகும்.

சங்கநூல்களில் இருவின் உருவம், வடிவம் ஆகியவை பற்றி அழகான உவமைகள் பயில்கின்றன.

> "இறவுப்புறத் தன்ன பிணர்படு தடவுமுதற்
> சுறவுக்கோட் டன்ன முள்ளிலைத் தாழை" —நற்றிணை, 19

"முற்ற மஞ்சள் பசும்புறங் கடுப்பச்
சுற்றிய பிணர சூழ்கழி இறவின்
கணங்கொள் குப்பை உணங்குதிறன் நோக்கிப்"
—நற்றிணை, 101

"நெருப்பி னன்ன செந்தலை யன்றில்
இறவி னன்ன கொடுவாய்ப் பெடையொடு"
—குறுந்தொகை, 160

இருவினுடைய உடல் தாழைமரத்தின் அடிமரம்போலப் பிணர் பட்டதாக, சுரசுரப்பு உடையதாக இருந்ததாகக் கூறியது மிகவும் அழகான, பொருத்தமான உவமையாகும். முற்றாத மஞ்சளின் பசியபுறத்தைப் போன்று சுற்றிச் சுற்றிப் பிணருடைய உடலுடன் இரு இருந்ததாக மற்றோர் உவமை கூறியுள்ளது. இருவையும் தாழையையும் முற்றாத மஞ்சளையும் நேரில் பார்த்தோருக்கு இந்த உவமைகளின் நயம் புலப்படும். அன்றில் பறவையின் வளைந்த அலகுபோல இரு இருந்ததாகவும் கூறப்பட்டுள்ளது.

"இருங்கழி முகந்த செங்கோ லவ்வலை
முடங்குபுற விறவோ டினமீன் செறிக்கு
நெடுங்கதிர்க் கழனித் தண்சாய்க் கானத்து"	—அகம், 220

"வண்டோட்டு நெல்லின் வாங்குபீள் விரியத்
துய்த்தலை முடங்கிருத் தெறிக்கும் பொற்புடை"
—அகம், 376

"முடிவலை முகந்த முடங்கிருப் பாவைப்
படுபுள் ஓப்பலிற் பகன்மாய்ந் தன்றே"	—நற்றிணை, 49

"முடக்கா லிறவின் முடங்குபுறப் பெருங்கிளை
புணரி யிகுதிரை தருஉந் துறைவன்"	—குறுந்தொகை, 109

"அத்த இருப்பைப் பூவின் அன்ன
துய்த்தலை இறவொடு தொகைமீன் பெறீஇயர்."
—நற்றிணை, 111

முடங்கு புற இறவு, முடங்கிருப் பாவை, முடங்கல் என்றும் இருவின் வளைந்த உடல் வர்ணிக்கப்பட்டுள்ளது. இருவின் தலையைத் 'துய்த்தலை' என்று பாடல்கள் கூறியுள்ளன. இறவின் தலையில் பஞ்சு போன்ற மயிரும் மீசையும் இருப்பதால் துய்த்தலை என்று கூறினதாகத் தெரிகின்றது. "இருப்பைப் பூவின் அன்ன துய்த்தலை" என்று நற்றிணை கூறியுள்ளது. இலுப்பைப்பூவைப் போல இருவின் துய்த்தலை இருப்பதாகக் கூறியது அழகிய உவமையாகும்.

"தழைமாய் காவிரிக் கடன்மண்டு பெருந்துறை
யிறவொடு வந்து கோதையொடு பெயரும்
பெருங்கட லோதம் போல"	—அகம், 12

"சுறவு மருப்புஅன்ன முள்தோடு ஓசிய
இறவார் இனக்குருகு இறைகொள இருக்கும்
நறவுமகிழ் இருக்கை நற்றேர்ப் பெரியன்" —நற்றிணை, 131

"கருங்கால் குருகின் கோளுய்ந்து போகிய
முடங்குபுற இறவின் மோவாய் ஏற்றை
எறிதிரை தொகுத்த எக்கர் நெடுங்கோட்டுத்
துறுகடல் தலைய தோடுபொதி தாழை
வண்டுபடு வான்போது வெரூஉம்
துறைகெழு கொண்கன் துறந்தனன் எனவே"
—நற்றிணை, 211

"இறவருந்தி யெழுந்த கருங்கால் வெண்குருகு"
—நற்றிணை, 67

"நல்குமதி வாழியோ நளிநீர்ச் சேர்ப்ப
அலவன் ருக்கத் துறையிருப் பிறழும்
இன்னொலித் தொண்டி யற்றே" —ஐங்குறுநூறு, 179

"சுறவழங்கு மிரும்பௌவத்
திறவருந்திய வினநாரை" —பொருநராற்றுப்படை 203-204

"கருந்தொழிற் கலிமாக்கள்
கடலிறவின் சூடுதின்றும்" பட்டினப்பாலை, 62-63

சங்கநூல்களில் இருவைக் கடற்காக்கைகளும் கூட்டமான பறவைகளும் உண்டதாகச் சொல்லப்பட்டுள்ளது. இனப்புள்ளும் இருவை உண்டதாகக் கூறப்பட்டுள்ளது. இருவை உண்ணும் பறவைகளில் கடற்காக்கை முக்கியமானது. அது போன்றே மலையாளத்தில் மத்திக்காக்கை என்றழைக்கப்படும் பறவையும் இருவை விரும்பித் தின்னும். இந்தப் பறவையைத் தமிழில் ஆலா என்றும், ஆற்றுக்குருவி, கடற்குருவி என்றும் அழைப்பர். இது கூட்டமாகச் சேர்ந்து மீன்களையும் இருவையும் வேட்டையாடும். சங்க நூல்களில் இனப்புள் இருவைத் தின்னும் என்று சொல்லிய இடத்தில் இனப்புள் என்றது இந்த ஆலா என்ற பறவையையேயாகும். கருங்கால் வெண்குருகும் இனநாரையும் இருவைத் தின்றதாகவும் கூறப்பட்டுள்ளது. கடல் நண்டும் இருவைப் பிடித்ததாகக் கூறப்பட்டுள்ளது. இருவைச் செங்கோல்வலையால் முகந்தனர் என்று கூறப்பட்டுள்ளது. இதை முடிவலை என்றும் அழைத்தனர். இருவைப் பாவை யென்று அழைக்கும் வழக்கம் இருந்தது. 'முடங்கிருப் பாவை' என்று சொல்லப்பட்டுள்ளது. இருமீன் பெருங்கூட்டமாகச் செல்வதை நன்கு தெரிந்திருந்தனர். இறவின் குப்பை, இறவின் கணங்கொள் குப்பை, முடங்குபுறப் பெருங்கிளை என்றும் இருமீன் கூட்டத்தைக் குறிப்பிட்டுள்ளனர். இருமீன் பெருங் கூட்டமாகக் கிடைக்குமென்பது இயற்கையில் காண்ப

தேயாகும். இவ்வாறு மிகுதியாகக் கிடைக்கும்போது அவற்றை வெயிலில் உணக்கிவைப்பர். உணக்கிவைத்த இருவை உண்பர். கடலிறவின் சூடு தின்றும் என்று பட்டினப்பாலை கூறியுள்ளது. பரதவர்கள் கடலிருவைச் சுட்டுத் தின்றனர் என்று தெரிகின்றது. கடலில் கிடைக்கும் உணவில் இருவைப்போல மிகுந்த சுவையுடையது எதுவுமில்லை என்று கூறுவர். ஒரு நற்றிணைப் பாடலில் (211) கருங்கால் குருகின் வாய்க்குத் தப்பிய இரு தாழையின் வெள்ளைப்பூவைக் கண்டு பயந்ததாகக் கூறப்பட்டுள்ளது. இதுபோன்றே தூண்டிலில் அகப்படாது தப்பித்த வாளைமீன் பிரப்பங்கொடியைக் கண்டு நடுங்கும் என்று ஒரு சங்கப்பாடல் கூறியுள்ளது. மீன்களும் மற்ற உயிர்களும் தங்களுடைய எதிரிகளின் நிழலையும் கண்டு அஞ்சும் தன்மையுடையன என்று கண்டுபிடித்துள்ளனர். இறவின் ஏற்றை என்று கூறப்பட்டுள்ளது. இருவினத்தில் ஆணும் பெண்ணும் தனியாகக் காணப்படும் என்பர். மலையாளத்தில் 'ஏட்டா' என்று இருவை அழைக்கும் வழக்கு உண்டு. ஏற்றை என்ற தமிழ்ப் பெயரே 'ஏட்டா' ஆகியிருக்கலாம். "ஏற்று மீனிரியப் பாய்ந்த எறிசுருவேறு போன்ருன்" என்று சிந்தாமணி (2283) கூறியுள்ளது. இந்த வரியில் ஏற்றுமீன் என்பது இருமீனக இருக்கலாம். சுருமீன் இருவை விரும்பித் தின்னும். ஆதலின் சுரு பாய்ந்ததும் இரு இரிதல் இயற்கையே.

சங்கநூல்களில் கூறப்பட்ட கடலிருவினங்கள் அறிவியற்படி Penaeus, Metapaneus Parapanaeus Spp ஆகிய இனங்களாகும். நன்னீர் இரு Palaemon Spp ஆகும். இருவைத் தற்காலத்தில் இரு, எரு, ருட்டு, றுலு என்று நாட்டுமக்கள் அழைக்கின்றனர். தெலுங்கில் ரெய்யலு என்றழைக்கின்றனர்.

(தொடரும்)

## பழந்தமிழ் இலக்கியங்களில் அறிவியற் கருத்துக்கள் தனிச் சிறப்பு

முன்பு செல்வி இதழ்களில் வெளியிடப் பெற்ற மரஞ் செடி கொடிகள், விலங்குகள், பறவைகள் பற்றிய செய்திகள் சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம், விலங்கின விளக்கம், புள்ளின் விளக்கம் என மூன்று தனித்தனி நூல்களாக வெளியிடப் பெற்றுள்ளன. அவைபோல நீர் வாழ் உயிரினங்களில் மீன்கள் பற்றிய கருத்துக்கள் இப்போது வெளியிடப் பெறுகின்றன. உயிரில் பொருள்கள் பற்றியும் பின்னர் வெளியிடப்பெறும். பிரஞ்சு, ஆங்கிலம், சமற்கிருதம் முதலிய பிறமொழி இலக்கியங்களில் இத்தகைய அறிவியற் கருத்துக்கள் கிடையா என்று பன்மொழிப்புலவர்கள் கூறுகின்றனர். அதனாலேதான் பழந்தமிழ்ப் புலவர்கள் 'கலைமலிந்த தமிழ்' என்றும். 'பல்கலையொடுதமிழ் வளருங்கூடல்' என்றும் வியந்துள்ளனர்.

# அரவிந்தர் படைத்த
# அமரகவி பாரதியார்

[டாக்டர் ந. சஞ்சீவி]

என்னுடைய 16 வது வயதில் யான் முதன்முதல் எழுதிய கட்டுரை 'பாரதியும் பாரதியும்' என்பதாகும். (இது 'உணர்வின் எல்லை' என்ற என் கட்டுரைத் தொகுப்பில் முதலாவதாக வெளி வந்துள்ளது.) பாரதியைப் பற்றியே என் முதல் கட்டுரை அமையத் தலையாய காரணம் எங்கள் வீட்டில் என் தந்தையார் ஓலைச் சுவடிகள் உட்பட ஏராளமான புத்தகங்களை எங்கெங்கோ அடுக்கி வைத்திருந்தார். அதனால் திரும்பிய திக்கெல்லாம் புத்தகங்களோடேயே பழக வேண்டியிருந்தது. இத்தகைய தொரு சிறை வாழ்க்கை எனக்கு இளமையிலேயே கிடைத்த தன் விளைவுதான் இன்றைய சிறகு வாழ்க்கையெல்லாம் என லாம். வேறு வழி இல்லாமல் நான் பார்த்துப் பழகிய புத்தகங்கள் காரணமாக என் அறிவுக் கோயிலின் அடிப்படை ஆழமாகவும் உறுதியாகவும் அமைந்தது.

இளமையில் யான் ஈடுபட்டுப் படித்த ஆங்கிலம், தமிழ் நூல்களுள் என் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்த ஆசிரியர்கள் இருவர். ஒருவர் ஆங்கில மொழியின் வாயிலாகக் குழந்தை உலகத்திற்குப் பெரும்பணி புரிந்த பெரியார் ஆர்தர் மீ (Aurther Mee). மற்றொருவர் தேசீய கவி என்று போற்றப்படும் சுப்பிரமணிய பாரதியார். இவ்விருவரிடமும் எனக்கிருந்த—இருக்கும்—ஈடுபாட்டுக்கு ஒரு பொதுமைக் காரணம் அவர்கள் எழுத்துகளின் வாயிலாக உலகின் முழுமையை—ஒரு முழு உலகத்தை—பார்க்க முடிகிறது.

இனி, இக் கட்டுரையில் தேசீயக் கவி எனப் போற்றப்படும் சுப்பிரமணிய பாரதியார் உண்மையில்—அடிப்படையில்—தேசீயக் கவிக்கும் உயிராக விளங்கும் தெய்வமாக்கவி என்பதை யும், அம் மாட்சியை அவர் பெறுதற்குரிய மாபெரும் காரணம் மகாயோகி ஸ்ரீ அரவிந்தர் பெருமானே என்பதையும் எண்ணிப் பார்க்கலாம். சுப்பிரமணிய பாரதியாரின் கவிதைகள் யாவும் முன்னே—சென்னை அரசின் வெளியீடாகத் தொகுக்கப்பட்டு (1954) வந்துள்ளது. அதில் காணப்படும் தலைப்புகள்—53+103+43+23=222+1 (பாஞ்சாலி சபதம்)+1 (குயில் பாட்டு)=224. இவற்றுள் 'தெய்வப் பாடல்கள்' என்ற தலைப்பில் நேராகச் சமயச் சார்புடையவையாய்க் காணப்படுவன 103+தாயுமானவர் வாழ்த்து—1+நிவேதிதா—1+அபேதாநந்தா—1+பாரதி அறுபத்தாறு—1+கண்ணன்பாட்டு—23=130.

எனவே, பாதிக்குமேல் சமயப்பாக்கள். எஞ்சியவற்றுள்ளும் எந்த ஒரு கவிதையும் சமய/தத்துவச் சார்பு அற்றது என்று சொல்லிவிட முடியாது. சொல்லப் போனுல் பாரதியாரின் தேச பக்தி(ப் பாடல்கள்) எல்லாமே தெய்வ பக்தியின்—அன்னை பராசக்தியின்—வாள்வடிவமே எனலாம். காரணம் சுப்பிரமணிய பாரதியாரின் ஆளுமை முற்றிலும் ஆன்மீக ஆளுமை என்பது எவரும் எளிதில் அறிந்து ஏற்றுக் கொள்ளக் கூடியதாகும். இந் நிலையில் இத்தகையதோர் ஆளுமை எப்படிக் கருவாக உருவாகியது—இல்லை கருவாகி உருவாகிய அஃது எப்படித் திருவாகியது என்பதை ஆழ்ந்து கருதுவதே இக் கட்டுரையின் குறிக்கோள்.

பாரதியார் நாட்டு விடுதலை இயக்கத்தில் நாட்டங்கொண்டார். அதன் காரணமாகவே—ஆங்கில ஏகாதிபத்தியத்தின் வேட்டையினின்றும் தப்பி வாழவே—புதுவையில் தஞ்சம் புகுந்தார்—1908 இல் ஆம். சுப்பிரமணிய பாரதியார் புதுவையில் புகுந்த பின்னரே வங்கத்துச் சந்திரநாகூரிலிருந்து அரவிந்தர் பெருமான் அங்கு வந்தார். இன்னும் சொன்னுல் கப்பலில் புதுவைக்கு வந்த அரவிந்தர் பெருமானைக் கைநீட்டி வரவேற்றுக் கரையில் சேர்த்த பெருமை கவியரசர் பாரதியாரின் தனிப் பெருமை எனலாம். இதற்கான தெளிவான சான்றுகள் கிடைக்கின்றன.

எடுத்துக் காட்டாக வீரவிளக்கு வ. வெ. சு. ஐயரின் வாழ்த்துரையை 11-8-1923 இல் பெற்று வெளிவந்த 'கவிக்குயில் பாரதியார்' என்னும் நூலில் சுத்தானந்த பாரதியார் எழுதியுள்ள பின்வரும் பொன்மொழிகள் போற்றத்தக்கன:

'புதுச்சேரிக்குப் போய்விட்டான்' என்றால், 'அடே, கடன்காரா என்பது வழக்கம். புதுவை, திராக் கடன்காரர்களுக்கே புகலிடமாயிருந்தது; அதைத் தேச பக்தர்களுக்குப் புகலிடமாக்கிய முதல் தேச பக்தர், பாரதியாரே!'.

—(சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழக மறுபதிப்பு (1970) பக்கம். 38)

'இச் சமயமே அரவிந்தர் வங்க மொழியில் "தர்மா", ஆங்கிலத்தில் "தர்மயோகி" என்ற இரண்டு வாரப் பத்திரிகைகளை நடத்தி, தோவேசங்கொண்ட சுதந்திர வேகத்தை நாடெங்கும் பரப்பினர். அரவிந்த யோகியிடம் அன்பு மிகுந்த பாரதியார், 'கர்ம யோகி'யைத் தமிழில் மொழி பெயர்க்கத் தொடங்கினர். அப்படியே "தர்மா" என்ற இதழும் நடத்தினர். வங்காளத்தில் அடக்குமுறை, தலைவிரித்தாடியது; அரவிந்தரும் பேனாவைக் கீழே வைத்து, யோக வழியில் முனைந்தார். இங்கும் தமிழில் தொடங்கிய 'தர்மா'வும் 'கர்மயோகி'யும் நின்றன.

அரவிந்தரை, பாரதி நண்பர் ஒருவர் கல்கத்தாவில் முன்பே சந்தித்துப் புதுச்சேரிக்கு அழைத்திருந்தார்.

அரவிந்தர் மறைமுகமாக 4-4-1910 இல் புதுச்சேரிக்கு வந்து சேர்ந்தார்'.

—(சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக மறுபதிப்பு (1970) பக்கம். 41)

அரவிந்தர் வந்தது முதல், பாரதியார் வாழ்வும் நினைப்பும் புதுமை பெற்றன. அரவிந்தர் வேதச் சுவை நிரம்பிய அருட்கவி; கீதை உபநிடதம் இரண்டையும் படித்துப் பயின்ற அறிஞர். புதுச்சேரியில் அவர் ருக் வேதத்தை ஆராய்ந்தார். அவர் உறவினால் பாரதியார் வேதவாக்குகளிற் கருத்தூன்றினார். பாரதியார் கீதையை ஆராய்ந்து தூய தமிழில் ஆக்கினார். வேதப் பாசுரங்களில் காதல் கொண்டு சிலவற்றை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார்; சில பாசுரங்களைப் பின்பற்றித் தமிழில் அமுதகானம் பாடினார். பதஞ்சலி யோக சூத்திரத்தை ஆராய்ந்தார்; ஆண்டாள், நம்மாழ்வார் பாசுரங்களில் சிலவற்றை ஆங்கில மாக்கினார். கண்ணனிடம் காதல் கொண்டு 'கண்ணன் பாட்டுப்' பாடினார்; வியாசரின் சபா பருவத்தைப் படித்து எளிய இனிய நடையில் 'பாஞ்சாலி சபதம்' எழுதினார். அரவிந்தர், பாரதியார் கவிதைகளைப் போற்றினார். புதிய புதிய எண்ணங்களை அள்ளிக் கொட்டுவதில் அரவிந்தருக்கு நிகரில்லை. அவர் கருத்துகள், பாரதி வாக்கில் உருக் கொண்டன. புதுயுகம், புதுவாழ்வு, புதிய மாறுதல், சத்திய யுகம், தேவ சங்கம் முதலிய கருத்துகளைப் பாரதியார் பாடல்களிற் காண லாம்; அரவிந்த சக்தியான அன்னைக்கும், பாரதியார் பாமாலை சூட்டி யிருக்கிறார். அரவிந்தரின் உறவு பாரதியாருக்குப் பெரும் பயனும் ஆறுதலும் அளித்தது. வந்தே மாதரம், கர்மயோகி, ஆரியா ஆகிய மூன்று பத்திரிகைகளும், பாரதி வாணிக்கு ஆவேசமளித்தன;

—(சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழக மறுபதிப்பு (1970)-பக்கம்-41-42)

வேறு எந்தத் தமிழ்க் கவிஞரும் பெறாத பெருமையைத் தம்/நம் பாரதி பெறும் வகையில் 'சித்திர பாரதி' (1957) என்ற அற்புதமான நூலைப் படைத்துள்ள ஆசிரியர் ரா. அ. பத்மநாபன் மேற்குறிப்பிட்ட தமது நூலில் 61ஆம் பக்கத்தில் 'அரவிந்தர், அய்யர் வருகை' என்ற அதிகாரத்திற்கு அணி செய்யும் அரவிந்தர் படத்தின் அடியில் குறித்துள்ள குறிப்பு வருமாறு: "பாபு அரவிந்த கோஷ்: அரவிந்தர் 1906-ல், அரசியல் தலைவராக இருந்தபோது, பாரதியின் யுக்தியைப் பின்பற்றிப் புதுவை வந்தவர் அரவிந்தர்." என்ற தனிச் சிறப்பு வாய்ந்த குறிப்பைப் பொறித்துள்ளார். வழவழாத் தமிழர்கள் இத்தகைய வைரச் செய்திகளை எங்கே போற்றிப் பயன்கொள்ளப் போகிறார்கள்?

சுப்பிரமணிய பாரதியாரின் கவியுள்ளம் கடவுள் சாறு நிறைந்த கனியாகக் கனிந்த கதையை வடமொழியில் இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற கவியாக விளங்கிய முனிமனத்தர் கபாலி சாத்திரிகள் தமது நினைவிலிருந்து நவின்ற வகையிலேயே அவர்தம் நம்பிக்கைக்குரிய நற்சீடர்-என் குருநாதர் - எம்.பி. பண்டிட் அவர்கள் "The Way of Light" என்ற

அரவிந்த ஆசிரம வெளியீடாகிய புத்தகத்தில் (1963) பொதிந்து வைத்துள்ளார்கள். அப் பகுதியின் தாராளத் தமிழாக்கம் வருமாறு:

"அப்போது ஏப்பிரல் 1917. புதுவையில் சங்கர செயந்தியை ஒட்டி ஒரு சொற்பொழிவு நிகழ்த்துமாறு அழைப்பு ஒன்று வந்திருந்தது. அந்த அழைப்பை ஏற்றுக் கொள்வதில் எனக்குக் கொஞ்சம் தயக்கம் இருந்தது. காரணம், அந்தக் கூட்டத்தை ஏற்பாடு செய்திருந்தவர்கள் கடும் வைதீகர்கள் என்பது எல்லோருக்கும் தெரிந்திருந்தது. என்னுடைய வாழ்க்கை வழி வைதீகத்தின் தரங்களுக்குப் பொருந்துவதாகவே இருந்தாலும் என்னுடைய எண்ணங்களும் கருத்துகளும் அழைப்பாளர்களின் கடுமையான பழமைப் பார்வைக்குப் பகையாகவும் சுவைகேடாகவும் இருக்குமோ என்ற ஐயப்பாடுகள் எனக்கு இருந்தன. ஆனுல், அவர்கள் தங்கள் அழைப்பை வற்புறுத்தினர். இறுதியாக யான் புதுவை செல்ல உறுதி பூண்டதற்கு இன்னுமொரு காரணம் இருந்தது. அது நான் நீண்ட நாளாக ஸ்ரீ அரவிந்தரைப் பார்க்க விரும்பிய விருப்பமே, இப்போது எனக்கு இந்த அழைப்பால் அந்த விருப்பத்தை நிறைவேற்றத் தவிர்க்க முடியாததொரு வாய்ப்புக் கிடைத்தது. மேலும் சங்கர செயந்தி போன்ற ஒரு புனித சமய நிகழ்ச்சியில் கலந்து கொள்ளச் செல்லும் ஒருவனைப் பற்றி, போலீஸ் - காவல் கொள்ளாது என்று யான் ஆசையுடன் கற்பனை செய்தேன். ஆனுல், நிகழ்ச்சிகள் என்னவோ வேறு வகையாய்த் திரும்பின; போலீஸ் காவலின் கண்காணிப்பு ஒன்றும் குறைவாக இல்லை. ஆனுல் அது வேறு ஒரு கதை.

நான் ஸ்ரீ அரவிந்தர் பற்றித் தனித்தன்மைச் சூழ்நிலைகளில் முதன்முதலாகக் கேள்விப் பட்டிருந்தேன். 1907-ல் பிபின்பால் தம்முடைய சொற்பொழிவுப் பயணத்திற்காகச் சென்னை வந்திருந்தார் சென்னை மாநகரமே மெரினுவில் அவருடைய இடிமுழக்கத்தின் ஆர்வத்தில் மூழ்கிக் கிடந்தது சூருவளியாய் நாடு முழுதும் சுழன்றடித்த புதுவேகத்தில் சிக்கிக்கொண்ட என்னுல் பிபின்பாலின் சொற்பொழிவுகளைக் கேட்பதினின்றும் தப்ப முடியவில்லை. இத்தகைய ஒரு சொற்பொழிவைக் கேட்டுத் திரும்பும் நிலையிலேயே அந்நாளில் கல்லூரி மாணவராக இருந்து பின்னுளில் ஓர் உள்ளூர்க் கல்லூரியில் முதல்வராக ஓய்வு பெற்ற என் நண்பர் ஒருவர் என்னைத் தனியே அழைத்து இவ்வாறு சொன்னுர்:

"இந்தப் பால் ஒரு ஒலிபெருக்கிதான்; ஆவேசம் பெற்று அவர் பேருரை ஆற்றுகிருர். உண்மைதான்; ஆனுல், அவர் தலைமைத் தலைவ

ரில்லை. இக் காட்சிகளுக்குப் பின்னே வேருெரு மனிதர் (இவர்களுக்காக) மேசை மேல் கட்டுரைகளை எழுதிக் கொண்டுள்ளார். அவர் பெயர் அரவிந்த கோஷ். அவர் ஒரு தெய்வீக மனிதர் - சக்தி உபாசகர்''.

எனவே, ஸ்ரீ அரவிந்தரைக் காணும் முக்கிய நோக்கத்தோடு புதுவைப் பயணத்தை மேற்கொள்ள முடிவு செய்தேன். புதுவையில் இறங்கியதும் கவி பாரதியிடம் சென்றேன். அப்போது அவர் ஈசுவரன் தருமராசா கோவில் தெருவில் இருந்தார். நான் வந்திருப்பதை அவருக்குத் தெரிவித்ததும் அவருடைய சின்னப்பெண் மேல்மாடிக்கு அழைத்துச் சென்ருர். அப்போது அவர் பின்வருமாறு பாடிக்கொண் டிருந்தார்.

''இந்த ஜன்மத்தில் ஜயமுண்டு பயமில்லை மனமே''

சிறிது நேர அமைதிக்குப் பின் சென்னையிலிருந்து ஓரிரு நண்பர்களைப் பற்றிப் பாரதியார் விசாரித்தார். இதற்கு முன் யான் பாரதியாரை மயிலாப்பூரில் பார்த்திருக்கிறேன். கடைசியாக யான் அவரைப் பார்த்தது 1907-க்குச் சற்று முன். ஆனுல் என்ன வேறுபாடு: சூழ்நிலைகள் அந்த ஆவேசக் கவிஞனின்-தமிழ்நாட்டுத் தேசீயக் கவிஞனின் உடல் கட்டையும், உருவமும் உணர்ச்சியும் நிறைந்த முகத்தையும் உருக்குலையச் செய்யச் சதிகள் புரிந்து விட்டன. அவர் சுருங்கிச் சோகை பிடித்து மறைந்துகொண் டிருந்தார். திடுமென அவர் கூவினுர்:

''குகனே, பரமன் மகனே, குகையில் வளரும் கனலே!'' என்று.

பாரதியார் காசியில் கொஞ்சம் வடமொழி அறிவு பெற்றிருந்தார் என்பது எனக்குத் தெரியும். ஆனுல், வேதங்களில் அவருக்கு ஆழ்ந்த பழக்கம் இருக்கும் என்பது எனக்குத் தெரியாது. அதிலும் மனித இதயத்தில் வளரும் தீ பற்றிய அடிப்படையான வேதக் கோட்பாட்டை வெளியீடு செய்யும் அளவிற்கு அவருக்கு அந்தப் புலமை இருக்கும் என்று நான் நினைக்கவில்லை. மேலும் அக்கினியைப் பரம்பொருளின் மகனுகிய குகனுகவும் குமாரனுகவும் கவிஞர் காண்கிருர். அவரை நான், எங்கிருந்து இந்த எண்ணம் பெற்றீர்கள் என்று கேட்டதும், அதற்கு அவர் சுவை நிறைந்த ஒரு விளக்கந் தந்தார். அதன் சாரம் வருமாறு:

''ஆம். நான் இருநூறு பாக்களை அரவிந்த கோஷிடம் படித்தேன். (பாக்களையா, இருக்குகளையா என்று எனக்கு நினைவில்லை)''.

வேத தெய்வங்களையும், பாக்களையும் பற்றி ஊக்கமும் பொது ஓர்மையும் ஸ்ரீ அரவிந்தரிடமிருந்தே பாரதிக்குக் கிடைத்

தன என்பதை அவரிடமிருந்தே நான் அறிந்து கொண்டேன். பின்னுல் அவர் அக்கினியைப் பற்றிய வேதப்பாக்கள் சிலவற்றைத் தமிழிலும் ஆக்கியுள்ளார்.

A. G. (ஏ. ஜி.) = அ. கோ. = அரவிந்த கோஷ் (இவ்வாறே அப்போது அவர் அழைக்கப்பட்டார்) பற்றிப் பேச்சு படர்ந்தது.

''அவர் எங்கே இருக்கிருர்?'' என்று வினவினேன்.

''அங்கே'' என்று அவர் ஐரோப்பியர் இருக்கும் பகுதியைச் சுட்டிக் காட்டினுர்.

''நான் அவரைப் பார்க்க விரும்புகிறேன்''.

''இப்பொழுதெல்லாம் அவர் யாரையும் பார்ப்பதற்கு விரும்புவதில்லை. நானே கூட முன்போல் அடிக்கடி சந்திப்பதில்லை. என்ருலும் விசாரித்துப் பார்க்கிறேன்,''

''தயவுசெய்து நான் ஒரு புனிதப் பயணமாக அவரைப் பார்க்க வந்துள்ளேன் என்று தெரிவியுங்கள்''.

நான் வற்புறுத்தினேன் - உணர்ச்சி வயப்பட்டவனுக. உண்மையில் உள்ளபடியே அந்தப் புனிதப் பயணம் எங்கோ - எவ்வளவு காலத்திற்கு முன்போ - ஆரம்பமாகி விட்டது.

பாரதி, ஒரு சிறு குறிப்பை - தனித்தன்மை வாய்ந்த நகைச்சுவையான ஒரு குறிப்பை - அக்காலத்தில் ஸ்ரீ அரவிந்தருக்கு ஊழியம் செய்து கொண்டிருந்த நாகசாமிக்கு எழுதினுர். அதில் அவரே சக்திகுமார் என்று கையொப்பமிட்டு ஸ்ரீ அரவிந்தரின் வீட்டிற்கு வழித் துணையாக ஒருவரையும் அனுப்பி வைத்தார்.

அப்போது பிற்பகல் 3 மணி - நாங்கள் ஸ்ரீ அரவிந்தர் வீட்டை அடைந்தபோது நாகசாமி உதவி புரிந்தார். பாரதியாரின் அந்தக் குறிப்பை எடுத்துக்கொண்டு ஏ. ஜி.யிடம் (அரவிந்த கோஷிடம்) போனுர்; இரண்டே மணித் துளிகளில் திரும்பினுர்.

''உங்களை இன்று பிற்பகல் ஆறு மணிக்குப் பார்ப்பார்'' என்ருர்.

இவ்வாறு கபாலி சாத்திரியார் - கடவுட் கலையோகி ஸ்ரீ அரவிந்தர் முதல் சந்திப்பே கவியரசர் பாரதியாரின் கைக் குறிப்பின் துணைகொண்டு நிகழ்ந்தது. ஆம்; கவியரசர் பாரதியார் பெற்ற பெரும் பெருமைகளுள் இதுவும் ஒன்று.

---

## "சிலம்பில் சிறுபிழை"

[ஆபிரகாம் அருளப்பன்]

இராஜபாளையம், விசுவசாந்தி பதிப்பகம் 1968 சனுவரியில் வெளியிட்டுள்ளதும் பன்மொழிப் புலவர் மு. கு. ஜகந்நாத ராஜா எழுதியதுமான ''சிலம்பில் சிறுபிழை'' (திறனாய்வு நூல்)'' என்னும் புத்தகத்தை 29-4-1976 அன்றே காணும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது.

தமிழ் மொழியின் இலக்கிய இலக்கண மரபும் முத்தமிழ்க் காப்பியப் பண்பும் அறியாமலே ஐம்பெருங் காப்பியங்களுட் சிறந்ததாகிய நெஞ்சையள்ளுஞ் சிலப்பதிகாரம் பற்றிய பற்பல பதின் கணக்கான பிழைக் கருத்துகளைக் கண்டிருக்கும் எனக்குச் ''சிலம்பில் சிறுபிழை'' மிக வியப்பளித்ததோடு அதனைக் காணும் ஆர்வத்தையும் தூண்டியது.

பக்கம் 45-46 ல் காணப்படுவது:—''...உ. வே. சாமிநாதய்யரும்...மு. ராகவய்யங்கார், S. வையாபுரி பிள்ளை, மயிலை சீனிவேங்கடசாமி, வேங்கடசாமி நாட்டார், ஔவை. துரைசாமி பிள்ளை,...பண்டிதமணி கதிரேசன் செட்டியார், மறைமலையடிகள், ஜகவீரபாண்டியனார், மு. வரதராசனார், சிலம்புச் செல்வர் ம. பொ. சி. முதலிய பெரும் புலவர்களுங் காணத் தவறிய ஒரு பிழையை அறிந்து முதன் முதலில் வெளியிட்டவர் ஒரு தெலுங்குக் கவிஞர் ஆவார்...பூதலப்பட்டு ஸ்ரீராமுலு ரெட்டி என்பது அவரது திருப்பெயர்...தமிழிலிருந்து திருக்குறள், நாலடியார், சிலப்பதிகாரம், மணிமேகலை, கம்பராமாயணம், பெரியபுராணம் முதலிய தமிழ்ப் பெருங் காவியங்களைத் தெலுங்கில் செய்யுள் வடிவில் மொழி பெயர்த்துள்ளார்.... இவர் தொண்டைப் பாராட்டிக் காரைக்குடி கம்பன் கழகத்தார் 28-3-53 ல் டாக்டர் அழகப்ப செட்டியார் தலைமையில் குன்றக்குடி அடிகளார் பொன்னாடைபோர்த்தி கௌரவித்தார்கள்...''

பக்கம் 82-ல் காணப்படுவது:—''திரு. ம. பொ. சி. அவர்களை இராஜபாளையம் காந்தி கலை மண்டபத்தில் 8-9-60ல இரவில் சந்தித்து இப்பாடல் பிழையுடையதென்றும், கால மயக்கம் உள்ளதாகவும் ஸ்ரீராமுலு ரெட்டி கூறியுள்ளார் என்று கூறினேன். அதற்கவர் எல்லாங் கேட்டபின், ''கவிஞனின் பாடல் பிழையன்று உரை கொள்ளுவதில் தான் பிழையென்றும் ஏதோ சிறிது மயக்கமுளதென ஒப்புவதாகவும் பாடலைப் பிழை கூற முடியாதெனவுங் கூறினார்... ஆனால் சரியாக $1\frac{1}{2}$ ஆண்டுகள் கழித்து 14-1-62ல தமிழ்நாடு, பொங்கல் இதழில் 'இளங்

கோவின் மறதி' என்ற தலைப்பில் என் கருத்தை ஒப்புக்கொண்டாற்போல் கட்டுரை எழுதினர்....பக்கம் 85: "இளங்கோவடிகள் அழியாப் புகழ் பெற்ற மகாகவியாக இருந்தும் யானைக்கும் அடிசறுக்கும் என்பதுபோல மறதியால் பிழை செய்தார் போலும்.''

இப் புத்தகத்துக்கு அணிந்துரை பன்மொழிப் புலவர் திரு தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் அவர்கள், துணைவேந்தர், மதுரைப் பல்கலைக் கழகம், கொடுத்தது:—...''சிலப்பதிகாரத்தில்,

> வண்டார் இருங்குஞ்சி மாலைதன் வார்குழல்மேற்
> கொண்டாள் தழீஇக் கொழுநன்பாற் காலைவாய்
> புண்தாழ் குருதி புறஞ்சோர மாலைவாய்க்
> கண்டாள் அவன் தன்னைக் காணாக் கடுந்துயரம்.

என்ற பாடல் ஒரு புதிர்...மேலே கண்ட பாடல் யார் கூற்று? கவிக் கூற்றாகக் கொண்டு திரு ராஜு அவர்கள் ஆராய்கின்றார். அந்த நோக்கில் அது சிலப்பதிகாரத்தில் ஒரு சிறு பிழையாகவே முடிகிறது.''

இவ்வடிகளில், திரு இராமலு அவர்கள் கண்டு, பன்மொழிப் புலவர் மு. கு. சகநாதராசா தமிழறிஞர்கட்குக் காண்பித்து அவர்கள் ஒப்புக்கொண்டது பிழையுமில்லை புதிருமில்லை. பொருளைக் காண்க:—நேற்றுக் காலை வேளையில் தன் கொழுநனாகிய கோவலனைத் தழுவி அவன் தனது கரிய குடுமியில் அணிந்திருந்த, வண்டுகள் செறிந்த மலர் மாலையைப் பெற்றுத் தனது நீண்ட கூந்தலில் அணிந்துகொண்டவளாகிய கண்ணகி வெட்டுண்ட புண்ணினின்று ஒழுகும் இரத்தம் புறத்துப் பாய்ந்தோட அவன் தன்னைக் காண மாட்டாத கடுமையான துயரத்தை இன்று இந்த மாலை வேளையில் அனுபவித்தாள்.

இளங்கோவடிகள் முறையாகக் காட்டியுள்ள முன்னைக் கதைநிகழ்ச்சிகட்குப் பொருத்தமாக, ''நேற்றைக் காலை'', எனப் பொருள்காணுந் தெளிவின்றி, ''இன்று காலை'', எனப் பொருத்தமற்ற வகையில் பொருள் கண்டாரும் அதனைப் பறைகொட்டிப் பரப்பியாரும், கேட்டுத் தலையாட்டி ஏற்று, ''ஆமாம் புதிர்'' ''ஆமாம் சிக்கல், மறதி'', என்ற தமிழறிஞருமெல்லாம் பிழைத்தார். அடைமொழி யின்றிக் காலையென உரைகூறி நின்றாரும் பிழைத்தார்.

''சிலம்பில் சிறுபிழை'' எழுதிய பன்மொழிப் புலவர் இத்தகைய பல பிழைகளைக் காட்டுகின்றார்; அத்தனையும் தம் பிழைப்பைக் காட்டுவனவே.—

ஆடித் திங்கள் பேரிருள் பக்கத்
தழல்சேர் குட்டத் தட்டமி ஞான்று
வெள்ளி வாரத்தில் 23 : 133-135

மதுரை எரிந்தது. அன்று முற்பகல் கண்ணகி வழக்குரைத்து வென்றாள். வியாழன் மாலை வேளையில் கண்டாள் அவன் தன்னைக் காணுக் கடுந்துயரம்—19 : 36. பின்னர்ச் சென்றாள் அரசன் செழுங்கோயில் வாயில்முன் —19 : 75. அன்றிரவை அங்குக் கழித்திருப்பாள்.

முந்தியநாள் புதன்கிழமை நண்பகல் முதலே கோவலனை நாடிக் கலங்கி யாரிடமுந் தன் கவலையைக் காட்டாமல் அந் நாளிரவையுங் கழித்தாள்.

வியாழன் காலையில் ஆய்ச்சியர் குரவை யிறுதியில்

அன்பனைக் காணாது அலவும் என் நெஞ்சன்றே
தஞ்சமோ தோழி தலைவன் வரக்காணேன்
வஞ்சமோ உண்டு மயங்கும்என் நெஞ்சாயின்
நெஞ்சலார் சொன்னது எவன்வாழியோ தோழி 18 : 20-24

என்று கேட்ட கண்ணகிக்குக் கிடைத்த மறுமொழி,

அரைசுறை கோவில் அணியார் ஞெகிழம்
கரையாமல் வாங்கிய கள்வனா மென்றே
குரைகழல் மாக்கள் கொலைகுறித் தனரே

என்பதாகும். கண்ணகி பொங்கி எழுந்து சென்றாள், கொலைக் களங் காண்பதற்கு.

செவ்வாய்க் கிழமை மாலையில் மாதரி வீட்டில் உணவு சமைத்துக் கோவலனுக்கு அளித்தபின் இருவரும் உரையாடி யிருந்து இரவைப் போக்கினராதல் வேண்டும். புதன்கிழமை காலையில்,

சீறடிச் சிலம்பின் ஒன்றுகொண்டு யான்போய்
மாறி வருவன் மயங்கா தொழிகெனக்
கருங்கயல் நெடுங்கண் காதலி தன்னை
ஒருங்குடன் தழீஇ 16 : 92-95

வெளியேறிய கோவலன் அன்று மாலையில் வெட்டுண்டு இறந் தான்.

இவ்வாறு கதைச் செய்திகள் நிகழ்ந்த காலத்தைத் தெளி வாக இளங்கோ புலப்படுத்துகிறார்.

அந்தோ! தமிழ் இலக்கியம் இலக்கணம் பற்றிய பலவகை யான பிழைக் கருத்துகள் நம் செந்தமிழ் நாட்டு அறிஞரிடை தின்று நிலவுகின்றனவே! என் செய்வாம்?

நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றுந்தன்
உண்மை யறிவே மிகும்.

———

# செய்திகளும் குறிப்புகளும்

## நூற்றுக்குநூறு வெற்றிகண்ட கல்வி நிலையம்

அண்மையில் நடைபெற்ற பள்ளி இறுதித் தேர்வில் (S. S. L. C. Exam.) ஈரோடு கலைமகள் கல்வி நிலையத்தைச் சேர்ந்த மாணவர் நூற்றுக்கு நூறு பேர் வெற்றி பெற்றுள்ளனர். கடந்த 14 ஆண்டுகளாக இப் பள்ளி மாணவர்கள் இங்ஙனமே நூற்றுக்கு நூறுபேர் வெற்றி பெற்று வருகின்றனர் என்பது குறிப்பிடத்தக்க செய்தியாகும். எனவே இப் பள்ளியின் தலைமை ஆசிரியர் செல்வ முத்தையா அவர்களையும், இப் பள்ளியின் பொறுப்பாளர் ஐயா மீனுட்சிசுந்தரனுர் அவர்களையும் உளமாரப் பாராட்டுகிறேம். அத்துடன் இவ்வெற்றி, வெற்றி விழா கொண்டாடுமளவிற்கு மேலும் தொடரவேண்டுமெனவும் விழைகிறேம்.

## மக்கள் தொகைப் பெருக்கம் பற்றிய சில வியத்தகு செய்திகள்

நாடு விடுதலையடைந்த நாள்தொட்டு இதுகாறும் இந்திய மக்கட்டொகையில் 25 கோடி பெருக்கமடைந்துள்ளது. இந்தியாவைப்போல் 6 மடங்கு பரப்பளவுள்ள சோவியத் உருசியாவிலேயே 25 கோடி மக்கள்தாம் உள்ளனர்.

இங்ஙனம் பெருகிவரும் மக்கள் தொகையின் வேகம் கட்டுப் படுத்தப்படாவிடில் இந்த நூற்றுண்டின் இறுதியில் 100 கோடியை எட்டிவிடும் என்று கருதப்படுகின்றது.

## 2,800 பவுனுக்கு விற்கப்பெற்ற டால்ஸ்டாயின் கடிதம்

உருசிய அறிஞர் டால்ஸ்டாய் 1910ஆம் ஆண்டு, செப்டம்பர்த் திங்கள் 7ஆம் நாள் காந்தியடிகளுக்கு ஒரு கடிதம் எழுதினர். அது வன்முறை கூடாது என்பதை விளக்கும் ஒரு கட்டுரையாக இருந்தது. காந்தியடிகள் தென்னுப்பிரிக்காவிலிருந்தபோது அவருக்கு அனுப்பப் பட்ட இக் கடிதம் இலண்டனிலுள்ள சேராத கடிதநிலையம் (dead letter office) ஒன்றிலிருந்து கிடைக்கப்பெற்று அதனை ஏலம் விடப்பட்டதில் 2,800 பவுன் கிடைத்தது.

## தில்லிப் பொருட்காட்சிச் சாலைக்கு வழங்கப்பெற்ற சில அரிய பொருள்கள்

பாண்டிய, பல்லவ, சோழ, விசயநகர, கருநாடக, தில்லி மன்னர்களின் 3178 பழங்கால நாணயங்கள், 1232 அரிய நூல்கள் ஆகியன 19-5-76இல் திருச்சியைச் சேர்ந்த சீத்தம்மா தேசிகாச்சாரி அவர்களால் தில்லிப் பொருட்காட்சிச் சாலைக்கு நன்கொடையாக வழங்கப்பெற்றன. இவற்றை மைய அரசின் கல்வி அமைச்சர் திரு. நூருல் ஹாசன் பெற்றுக்கொண்டார்.

## இன்னிசையால் இன்னல் தீர்ந்த விந்தை!

இலண்டன் மாநகரில் 18-5-76இல் காதரின் என்னும் 10 வயதுப் பெண் ஒருத்தி 'சைக்கிள்' வண்டியால் மோதுண்டு விழுந்து, மயக்க

மூற்றுப் பன்னிரண்டு நாள்கள் கண் திறவாமல் படுக்கையில் கிடந்தாள். அவள் இசையிலே விருப்பமும், இசைக்கேற்ப நடனமாடும் வழக்கமும் உடையவள். எனவே, அவள் பெற்றோர் மருத்துவரின் அனுமதி பெற்று நாடாப் பதிவு (Tape record) செய்யப்பட்ட அவளுக்குப் பிடித்தமான சில பாடல்களை அவள் படுக்கையருகில் வைத்து இசையெழுப்பினர். அவ் விசையினைக்கேட்ட அவள் இதழ்கள் மலர்ந்தன. முகத்தில் புன்முறுவலும் பொலிவும் தோன்றின. கண்கள் திறந்தன. அவளுற்ற மயக்க நோயும் மறைந்தது. இசையால் இன்னல் தீர்ந்தது கண்டு அவள் பெற்றோரும் மற்றோரும் மகிழ்ந்தனர். பழக்கமான சில குரல் ஒலிகளை மயக்கமுற்றோர் கேட்பதால் களைப்புற்ற மூளையின் பகுதி களைப்பு நீங்கப் பெறும் என்று ஒரு மருத்துவர் கூறுகிறார்.

## அமைச்சர் சி. சுப்பிரமணியம் அவர்களின் புதிய பொருளியல் திட்டம்!

நாட்டின் பொருளியல் துறையில் தனியார்துறை, அரசுத்துறை, கூட்டுத்துறை, கூட்டுறவுத்துறை என நான்கு துறைகள் இருப்பது போன்று தொழிலாளர் துறை (Workers sector) என ஐந்தாவதாக ஒரு தொழில்துறையினை அமைக்க நடுவணரசு நிதி அமைச்சர் திரு. சி. சுப்பிரமணியம் அவர்கள் புதியதொரு திட்டத்தினை வகுத்துள்ளார். இத் திட்டப்படி ஒரு கோடிக்கு மேற்பட்ட தொழிலாளர்களின் ஆயிரங் கோடி ரூபாயை முதலீடு செய்து தொழிலாளர் துறைத் தொழிற்சாலை களை அமைக்கலாம் என்பது அவருடைய கருத்தாகும். தொழிலாளர் களின் அருந்தற்படியில் முடக்கி வைக்கப்பெற்றிருக்கும் இந்த ஆயிரம் கோடி ரூபாயை வீணுக்காமல் தொழிலாளர் துறைக்கே அது பயன் படும்படி செய்வதால் மீண்டும் பணவீக்கம் ஏற்படாமல் தடுக்கலாம் என்பதும் அவர் கருத்தாகும்.

## இந்தியாவில் மலைக்காய்ச்சல் (மலேரியா) பெருக்கம்

கடந்த 10 ஆண்டுகளாக அடங்கிக் கிடந்த மலேரியா என்னும் மலைக்காய்ச்சல் நோய் இப்போது மீண்டும் தலைதூக்கத் துவங்கியுள்ளது என்று இந்திய அரசின் மருத்துவத்துறை அறிக்கையில் புள்ளி விவரங் களோடு கூறப்படுகிறது. பல மாநிலங்களில் இந்நோய் முன்பிருந்ததை விட இரண்டு மடங்காகப் பெருகியுள்ளது. 1974க்கும் 1975க்கும் இடைப்பட்ட காலத்தில் மேற்கு வங்கம், கருநாடகம், அரியானு, திரிபுரா, இமாசலம், தில்லி, கோவா, ஜம்மு காசுமீர், தமிழ்நாடு ஆகிய பகுதிகளில்தான் மலேரியா வளர்ச்சி மிக அதிகரித்துள்ளது என்றும் அதிலும் தமிழ்நாட்டில்தான் அஞ்சத்தக்க அளவு - அஃதாவது 516.1 என்னும் விழுக்காட்டில் மலேரியா நோய் வளர்ந்துள்ளது என்றும் கூறப் படுகிறது.

## பேராசிரியர் டாக்டர் இராமலிங்கசாமி அவர்கள் பெற்ற அனைத்துலக விருது

18-5-76இல் ஜினீவாவில், உலக நல்வாழ்வுத் துறை இயக்கத்தின் (WHO) சார்பில் நடைபெற்ற ஒரு விழாவில், அனைந்திந்திய மருத்துவ அறிவியல் துறை இயக்குநர் பேராசிரியர் டாக்டர் வி. இராமலிங்க சாமி அவர்கட்கு, அவர்தம் பணியினைப் பாராட்டுமுகத்தான் அனைத்துலக

விருது ஒன்று அளிக்கப் பெற்றது. உலக நல்வாழ்வுத் துறை மன்றத் தலைவர் சர். ஹெரால்டு வால்டர் டாக்டர் இராமலிங்க சாமி அவர்களின் 30 ஆண்டு நல்வாழ்வுப் பணிகளைப் பாராட்டிப் பேசினர். கழக ஆட்சியாளர் பத்மஸ்ரீ பட்டம் பெற்ற 1969ஆம் ஆண்டில் அவரருகில் அமர்ந்து திரு. இராமலிங்கசாமி அவர்களும் ' பத்மஸ்ரீ " (தாமரைச் செல்வர்) பட்டம் பெற்றமை குறிப்பிடத் தக்கது.

## பழங்காலக் கையெழுத்துப் படிகள் கண்டெடுக்கப் பெற்றன

சாங்கியம், நியாயம், சோதிடம், வேதாந்தம், காவியம் ஆகிய பொருள்கள் பற்றி, எழுதப்பட்ட 1000க்கு மேற்பட்ட பண்டைக்காலக் கைப்படிகள் 'பந்தா' என்னும் ஊரில் சித்திரகூடம் என்னுமிடத்திலுள்ள பழைய கோவில் ஒன்றிலிருந்து கண்டெடுக்கப் பெற்றன. இக் கைப் படிகள் அனைத்தும், பாலி, பிராகிருதம், சமக்கிருதம் ஆகிய மொழிகளில் கையால் செய்யப் பெற்ற தாளில் எழுதப்பட்டுள்ளன. இவை டாக்டர் சத்திரிக்கா பிரசாத் திட்சிதர் என்னும் ஆராய்ச்சி அறிஞரால் கண் டெடுக்கப் பெற்றவையாகும்.

## தமிழக – இலங்கைப் பண்பாட்டுத் தொடர்புகள்

பல நூற்றாண்டுகளாக இந்தியாவுக்கும் இலங்கைக்கும், அதிலும் சிறப்பாகத் தமிழ் நாட்டிற்கும் இலங்கைக்கு மிடையே பண்பாட்டுத் தொடர்பு இருந்து வந்திருக்கிறது என்பது இலங்கையில் கண்டெடுக்கப் பெற்ற கல்வெட்டுகளிலிருந்து தெரியவருகிறது என்றும், இப் பண்பாட்டுத் தொடர்பு மீண்டும் புதுப்பிக்கப்பட வேண்டும் என்றும் அண்மையில் நடைபெற்ற தமிழ்நாடு தொல்பொருள் ஆராய்ச்சித் துறைக் கூட்டமொன்றில் பேசப்பட்டது.

## சுந்தர ஓதுவா மூர்த்தி திருமுறை மன்ற அமைப்புக் கூட்டம்

புகழ் பெற்ற திரு. சுந்தர ஓதுவா மூர்த்தி அவர்களின் பெயரால் 25—5—76இல் திருமுறை மன்றம் அமைக்கப்பெற்றது. திரு. அ. இராகவன் அவர்கள் மன்றத் தலைவராகவும், திருவாளர்கள் சங்கரனர், அருணகிரி, பழனி சாமிநாதன் ஆகியோர் துணைத்தலைவர்களாகவும், மு. சு. சங்கர், சிவசம்பு ஆகியோர் செயலாளர்களாகவும் தேர்ந் தெடுக்கப் பெற்றனர்.

———

# மதிப்புரை

## உலகில் தமிழும் தமிழரும்

[டாக்டர் பொன் கோதண்டராமன், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-20. ரு. 4-00.

'தேமதுரத் தமிழோசை உலகமெலாம் பரவும் வகை செய்தல் வேண்டும்' என்ருர் மகாகவி. தமிழகத்திற்குத் தேவையான கலைச் செல்வங்களைக் கொண்டுவரச் சென்றிடுவீர் எட்டுத் திக்குமென்ருர். தமிழர்கள் மேற்கூறிய காரணங்களுக்காகப் பல்வேறு நாடுகட்குச் செல்லவில்லை யென்ருலும் உழைத்துப் பிழைக்க அங்கெல்லாம் குடியேறினர்.

ஐந்தாறு தலைமுறையாய்த் தாய்த் தமிழகத்தையும் தாய்த் தமிழையும் அறியாமல் வாழ்கின்ற தமிழ் மக்களும் உளர். உலகில் எங்கெல்லாம் தமிழர் வாழ்கின்றனர் என்பது பற்றி விரிவாய் ஆய எழுந்ததே இந்நூல். பல்வேறு நாடுகளில் வாழும் தமிழர்களின் சில புள்ளி விவரங்களுடன் தரப்பட்டுள்ளது. அத் தமிழர்களைக் கொண்டு தமிழ் மொழிக்கு எவ்வகையில் ஆக்கம் தேடவேண்டும் என்பதையும் நூலா சிரியர் விளக்குகிறார். தமிழ் மொழியை மறந்து வாழும் அத் தமிழர் கட்கு முதலில் தமிழை நன்கு பயில வாய்ப்பு ஏற்படுத்தித் தருதல் வேண்டும். தமிழர் மொழி, சமயம், பண்பாடு ஆகியவற்றைப் பரப்பு வோர்க்கு இந்நூல் பெரிதும் பயன்படும். மிக அரிய செய்திகள் இந் நூலில் அரும்பாடுபட்டுத் தொகுத்துக் கொடுக்கப்பெற்றுள்ளன.

## இன்பத் தமிழ் ஓசை

[ஆசிரியர்: டாக்டர் மோ. வாசுகி அம்மையார் எம்.ஏ., எம்.லிட். பிஎச்.டி கிடைக்குமிடம்: சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிட்., 1/140, பிரகாசம் சாலை, சென்னை-1. விலை: ரூ. 7-00]

பேராசிரியர் மோசூர் கந்தசாமி முதலியாரின் திருமகளாகிய திருவாட்டி வாசுகி அம்மையார் இந்நூலின் வாயிலாகத் தமிழின் இனிமையினையும் ஏற்றத்தையும் 13 கட்டுரைகளாகத் திரட்டித் தருகிறார். இஃதொரு திறனாய்வு நூலாகவும், அதே சமயத்தில் எல்லாரும் படித்து மகிழத்தக்க வகையில் இனிய எளிய நடையிலும் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது.

## இருவிழிகள்

[ஆசிரியர்: பண்டித ரத்ன என். ஏ. வேலாயுதம், அன்பு நிலையம். வடிவீசுவரம், நாகர்கோவில், விலை: ரூ. 15-00]

நாட்டு விடுதலைப் போரைப் பின்னணியாகக் கொண்டு எழுதப் பெற்றுள்ளது இப் புதினம். கருத்தாழமும் சுவையும் உடைய கதை, அரசியல் ஈடுபாடுடையோர்க்குச் சிறந்த கதைவிருந்தாக நல்ல தமிழில் எழுதப்பட்டுள்ளது.

## கயமையைக் களைவோம்

[ஆசிரியர்: ஆலந்தூர் கோ. மோகனரங்கன், வசந்தா பதிப்பகம், 21. தருமராசா கோயில் தெரு, ஆலந்தூர். சென்னை-600016. விலை. ரூ. 6-00]

மக்கட் குழுவினின்று களையப்பட வேண்டிய தீமைகளுள் கயமை தலையாயது. எனவே கயமையைக் களையவேண்டி, பண்பழகன் என்னும் நாடக உறுப்பினனை நடமாடச் செய்து இந்த அரிய நாடக நூலை இயற்றியுள்ளார் இந் நூலாசிரியர். இந் நாடகம் 1974 இல் அனைத் திந்திய வானொலியில் ஒலிபரப்பப் பெற்றது. இனிய செந்தமிழ்க் கவிதை வடிவில் அமைந்துள்ள இந் நாடகம் சுவையும் பயனும் மிக்கது.

---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2/140, பிரகாசம் சாலை, அப்பர் அச்சகத்தில் திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: வ. சுப்பையா.

## பிறபதிப்பாளரின் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| நாடகக்கலையின் வரலாறு—*எஸ். வி. சகஸ்ரநாமம்* | 6 | 00 |
| கருத்தரங்கம் ஆய்வுகள்—*அகிலன்* | 16 | 00 |
| தமிழில் நாடகம்—*பேராசிரியர் நாரண துரைக்கண்ணன்* | 5 | 00 |
| வள்ளுவர் வகுத்த பொருளியல்—*டாக்டர் தி. முருகரத்தனம்* | 7 | 50 |
| வையை [*வியாழ வட்டக் கருத்தரங்கம் மலர்-2*] | 8 | 00 |
| பெருமாள் திருமொழி—*அண்ணங்கராசார்ய ஸ்வாமிகள்* | 5 | 00 |
| மனையடி சாஸ்திரம்—*பி. எல். முத்துக்குமரன்* | 3 | 00 |
| இந்திய குற்ற இயல் சட்டம்—*வழக்கறிஞர் அ. ச. நடராஜன்* | 7 | 00 |
| குறள் கூறும் சமுதாயம்—*காமாட்சி ஸ்ரீனிவாசன்* | 10 | 00 |
| ஊசிகள்—*மீரா* | 4 | 00 |
| குலோத்துங்கன் கவிதைகள்—*டாக்டர் குழந்தைசாமி* | 2 | 50 |
| சிறகுகள் முறியும் | 10 | 00 |
| அடியார்க்கு நல்லார் உரைத்திறன் —*டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்* | 12 | 00 |
| விலங்குகள்—*ராஜம் கிருஷ்ணன்* | 4 | 75 |
| அருளும் பொருளும் தரும் அஷ்டலக்ஷ்மி | 2 | 25 |
| குழந்தைகள் கலைக்களஞ்சியம் (*10 பகுதிகள்*) தனித்தனி | 10 | 00 |
| வேட்டி—*கி. ராஜநாராயணன்* | 6 | 00 |
| ஆரோக்கிய வாழ்வு—*ஆசனா-இரா-ஆண்டியப்பன்* | 10 | 00 |
| மூல வியாதியை நீக்கும் யோகாசனங்கள் ,, | 5 | 00 |
| நீரழிவு நோயை நீக்கும் யோகாசனங்கள் ,, | 5 | 00 |
| ஆய்வுக்கோவை—[*பல்கலைக்கழகத் தமிழாசிரியர் கருத்தரங்கு, மைசூர், 1976*] *2 தொகுதிகள்* | 36 | 00 |
| Kuruntokai—M. Shanmugam Pillai, David E Ludden | 80 | 00 |
| Tamil, a bird's eye view—Dr. T. P. Meenakshisundaram | 30 | 00 |

### "செந்தமிழ்ச் செல்வி"

### கையொப்பத் தொகை விவரம்

செந்தமிழ்ச் செல்வி சிறந்த இலக்கியத் திங்கள் வெளியீடு. வரலாற்றுச் செய்திகள், இலக்கண இலக்கியக் கட்டுரைகள் தொடர்ந்து இதில் வெளியிடப் பெறுவதால், இஃது தொகுத்து வைத்துப் போற்றப்பட வேண்டிய இதழாகும். தனித்தனியாக இதழ்கள் விற்பனைக்குத் தரப்படமாட்டா. எனவே, கையொப்பம் செலுத்தி உடனே உறுப்பினராகுங்கள். கையொப்பம் விவரம் வருமாறு :

| | | |
|---|---|---|
| ஆண்டுக் கையொப்பம் (உள்நாடு) | 10 | 00 |
| ,, (வெளிநாடு) | 20 | 00 |
| வாழ்நாள் கையொப்பம் (உள்நாடு) | 120 | 00 |
| ,, (வெளிநாடு) | 250 | 00 |

---

பதிவு எண் : M. 4899

# கழகப் புதிய வெளியீடுகள்

**சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம்**

—புதுவை பி. எல். சாமி, பி. எஸ்ஸி.

சங்க இலக்கியத்தில் பல அறிவியல் செய்திகள் பொதிந்து கிடக்கின்றன. அவற்றுள் உயிரினங்களைப் பற்றிய செய்திகளும் ஆங்காங்கே விரவிக் காணப்படுகின்றன. முன்னர்ச் "சங்க இலக்கியத்தில் செடி கொடிகள்," "சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம்" ஆகிய நூல்களை எழுதிய இந்நூலாசிரியர் இதன்கண் 38 தலைப்புகளில் சங்க இலக்கியத்தினின்றும் பலவகைப் புள்ளினங்களைப் பற்றிய கருத்துகளைத் தொகுத்து அவற்றிற்கு இக்கால அறிவியல் நூல்களினின்றும் தக்க மேற்கோள்கள் காட்டி விளக்கம் தருகிறர். அறிவியற் கல்வி பெறுவோர்க்கும் ஆராய்ச்சியாளர்க்கும் இந்நூல் ஒரு நல்விருந்தாகும். விளக்கப் படங்களுடன் கூடிய அழகிய பதிப்பு. நூலகங்களில் இருக்க வேண்டிய அரிய படைப்பு. ரூ. 20 00

**பெருந்தகை மு. வ.**

—டாக்டர் சி. பாலசுப்பிரமணியம், M.A., M.Litt. Ph.D.

தமிழ் நூலாசிரியருள் தலை சிறந்தவரும், நுண்மாண் நுழைபுலமிக்க புலவர் பெருந்தகையுமான டாக்டர் மு. வரதராசனுர் அவர்களின் வாழ்க்கை வரலாறு அவர்தம் மாணவர் டாக்டர் சி. பாலசுப்பிரமணியனுர் அவர்களால் மிகச் செம்மையாக நல்ல தமிழில் எழுதப்பட்டுள்ளது.

ரூ. 10 00

**மறைமலையடிகள் கருத்தோவியம்**

— தொகுப்பாசிரியர் : கழக அறிஞர் குழுவினர்

தமிழும் சைவமும் தம் இருகண்கள் எனக் கொண்ட தனித்தமிழ்த் தந்தை மறைமலையடிகளாரின் சிறந்த மறுப்புரைகளும் ஆய்ந்து கண்ட உண்மைகளும் இந்நூலில் ஆறு தலைப்புகளில் அமைந்துள்ளன. பிறர் காண்டற்கரிய பல அருங்கருத்துக்களை இவர்கண்டு வெளியிட்டுள்ள திறம் கண்டு கண்டு மகிழ்வதற்குரியது. சமய அன்பர்களும், தமிழ் ஆர்வலர்களும் படித்துப் பயன் பெறத்தக்க அரிய படைப்பு. இதுவரை நூல்வடிவில் வெளிவராத கருத்துக் குவியல்.

விலை ரூ. 7 50

**பொருளியல் கதைக் கொத்து**

[இரு தொகுதிகள் 10 நூல்கள்]

ஆசிரியர் : மா. பா. குருசாமி எம்.ஏ.டி.ஜி.டி.

'பொருளிலார்க்கு இவ்வுலகமில்லை' என்பது வள்ளுவன் வாய்மொழி. நாடு வளம் பெற்றல் நாம் வளம் பெறுவோம், வீடு வளம் பெறும். எனவே, நாம் வளம் பெற அரிய பல வழி முறைகளைப் பல தலைப்புகளில் இந்நூலாசிரியர் நமக்குப் படைத்துத் தந்துள்ளார்கள். ஒவ்வொருவரும் வளம் பெறப் பல வழி முறைகளைத் தேர்ந்தறிய, பாலமாக அமைந்துள்ளது இந்நூல் என்று கூறலாம். சிறந்த படைப்பு. (பத்து நூல்கள்)

விலை ரூ. 20 00

அப்பர் அச்சகம் சென்னை -1.